# உங்கள் குழந்தை நலமாய் வாழ...

**நல்ல கண்பார்வை**

விடமின் ஏ நல்ல கண்பார்வை தருகிறது. 1 டீஸ்பூன் ஸிரப் மினடெக்ஸில் போதுமான அளவு விடமின் ஏ உள்ளது.



**ஆரோக்கியமான இரத்தம்**

ஸிரப் மினடெக்ஸில ஆரோக்கியமான இரத்தம் பெறுவதற்குப் போதுமான இரும்புச் சத்து உள்ளது. இது வளரும் பெண்ணுக்கு அத்தியாவசியமானது.

**உறுதியான எலும்புகள்**

விடமின் டி எலும்புகள் உறுதியடைய அவசியம். 1 டீஸ்பூன் ஸிரப் மினடெக்ஸில் போதுமான அளவு விடமின் டி உள்ளது.




உங்கள் குழந்தைக்குத் தருவீர்

ஸிரப்

## மினடெக்ஸ்®

மூப்பயன் அளிக்கும் டானிக்—
க்ளாக்ஸோ தயாரிப்பு!

தினமிருக்கட்டும், நாள்தோறும் 1 டீஸ்பூன் ஆரஞ்சு சுவையுள்ள ஸிரப் மினடெக்ஸ் உங்கள் குழந்தைக்குத்தந்தால், மூன்று விதங்களில் ஆரோக்கியப் பாதுகாப்பு கிடைக்கும்.

170 மி.லி....ரூ. 3.63 }
340 மி.லி....ரூ. 6.27 } வரிகள் தனி

எல்லா கடைகளிலும் கிடைக்கும்

க்ளாக்ஸோ

CMGM-2-172 Tam

இப்போது
புதிய
தோற்றத்தில்!




# ஸ்வஸ்திக் பெர்ஃப்யூம்டு கேஸ்டர் ஆயில்

பரட்டையான படியாத கேசத்தையும் பணியவைக்கும் நாள் முழுதும் கேசத்தை எடுப்பாக எழிலோங்கச் செய்யும்.

பட்டுப்போன்ற படியும் கேசம்...
ஒளிசிந்தும் எழிலோங்கும் கேசம்...
ஆரோக்கிய நறுமணம் வீசும் கேசம்...
நாள் முழுதும் எடுப்பாக விளங்கச் செய்கிறது ஸ்வஸ்திக் பெர்ஃப்யூம்டு கேஸ்டர் ஆயில்.

ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ், பம்பாய்.

(S&Tp) SDM 17/65 [redacted]

# லிப்டன் ரூபி டஸ்ட்

## தூள் தேயிலைகளில் ஒப்புயர்வற்ற மன்னன்

போட்ட கணமே கெட்டியாகக் கிட்டிடும் தேநீர்.
நல்ல நிறத்துடன் நிறைந்த ருசி—இதுவே ரூபி டஸ்ட்,
தூள் தேயிலைகளில் ஒப்புயர்வற்ற மன்னன்.
ரூபி டஸ்ட் சிக்கனமானதும் கூட. மற்றெந்த தூள் தேயிலையையும்
விட அதிக அளவு கோப்பைகளைக் கொடுக்கிறது.
இன்றே ரூபி டஸ்ட் பாக்கெட் ஒன்று வாங்குங்கள்.

RUBY
DUST


லிப்டன் என்றாலே நல்ல டீ

LRDC-2 TAM

# கல்கி

## பொருளடக்கம்

சாதாரண, கார்த்திகை 28 - டிசம்பர் 13, 1970



கார்த்திகை தீபம் - (அட்டைப் படம்) - ஆர்.பி.எஸ்.மணி

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

கல்கிக்கு வரும் கதைகள், கட்டுரைகள், கவிதைகள் முதலானவற்றில் பிரசுரத்துக்கு ஏற்கப்படாதவை, போதிய தபால்தலைகளுடன் கூடிய முகவரியிட்ட உறையோடு வந்திருந்தால் அவ்வப்போது திருப்பி அனுப்பப்படுகின்றன. போதிய தபால் தலைகளுடன் வராத கதைகள், கட்டுரைகள், கவிதைகள் பற்றி இக் காரியாலயம் பொறுப்பேற்பதற்கில்லை.





தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



ஸ்ரீ மலர் 30



இதழ் 20

# இந்திய இன்ஷ்யூரன்ஸுக்கு நூறாண்டு

ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் தொழில் இந்தியாவில் ஆரம்பிக்கப்பட்டு நூறாண்டு ஆகிறது. அத்தொழில் நன்கு பெருகி வளர்ந்து வளம்சேர்க்க வாழ்த்துகிறோம்.

நம் நாட்டில் இன்ஷ்யூரன்ஸ் அடைந்துள்ள வளர்ச்சி, அதன் செயல் முறை, அது புரியும் சமூகப் பணி முதலிய அம்சங்களைக் கவனித்தால், அதைப் பற்றி விசேஷமாகப் பாராட்ட எதுவுமில்லை.

ஆரம்ப காலத்திலிருந்து பாரதம் சுதந்திரம் அடைவதற்கு முன்புவரைகூட இன்ஷ்யூரன்ஸ் தொழில் மந்த கதியில் தான் நடந்து வந்தது. நகரங்களில் மட்டுமே இதற்கு ஆதரவு கிடைத்து வந்தது. சுதந்திரத்துக்குப் பின்பு, இத்தொழில் வேகமாக வளர்ந்து பல புதுக் கம்பெனிகள் தோன்றின. போட்டா போட்டி இருந்ததால், தொழில் திறமைக்கும் வளர்ச்சிக்கும் இடமிருந்தது.

இந்தச் சூழ்நிலையில் ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் தேசிய உடைமையாக்கப்பட்டது. அதன் பின் இத்தொழில் மூன்று வகையில் முன்னேற்றம் காணக் கூடும் என்று மக்கள் எதிர்பார்த்தனர். இதனால் கிடைக்கக் கூடிய பாதுகாப்பு மேன்மேலும் அதிகமான மக்களுக்குக் கிடைக்கலாம்; பாலிஸி எடுத்துக்கொள்ளுவதற்கு ஆகும் தவணைக் கட்டணங்கள் படிப்படியாகக் குறையக் கூடும்; மக்களிடமிருந்து வசூலிக்கப்படும் பிரீமியத்திலிருந்து வீட்டு வசதி போன்ற மக்களுடைய அவசியமான தேவைகளுக்குக் கடன் உதவி கிடைக்கும் என்றெல்லாம் மக்கள் எண்ணினர்.

கிராம மக்களிடையே இன்ஷ்யூரன்ஸ் பாதுகாப்பு சிறிதளவு பரவியிருந்தாலும் இன்னமும் நாட்டுப்புறத்தில் இதற்கு வரவேற்பு குறைவே. மக்களின் சராசரி வயது உயர்ந்துள்ளதால் பிரீமிய விகிதம் கணிசமாகக் குறையத்தான் வேண்டும். ஆனால் அப்படி நடக்கவில்லை. தவிரவும், ரூபாயின் மதிப்பு குறைந்து கொண்டேயிருப்பதால், இருபது இருபத்தைந்து ஆண்டுகளுக்குப் பின்னர் இன்ஷ்யூர் தொகையைப் பெறும்போது அதன் உண்மை மதிப்பு ஒன்றுக்குப் பாதி, கால் என்று குறைந்துபோவதுமக்களுக்கு இதில் உற்சாகத்தைக் குறைக்கிறது.

போட்டியின்றி ஏகபோக உரிமையுடன் இத்தொழில் செயல்படுவதால், பிரீமிய விகிதங்கள் நியாயமானவைதானா, நிர்வாகச் செலவுகள் சிக்கனமானவைதானா என்றெல்லாம் ஒப்பிட்டுச் சொல்வது முடியாது.

சதாப்தி ஆண்டில் முடிவுற்ற இன்ஷ்யூரன்ஸ் பாலிஸிகளுக்கான தொகை பாலிஸிதாரர்களுக்கோ, அவர்களது வாரிசுகளுக்கோ 80சத விகிதம் இன்னும் கொடுபடாமலிருப்பது வருந்தத்தக்கது.

ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் பிரீமியம் வசூல் மூலம் திரட்டும் பெருவாரியான பணம் லாபமற்ற சர்க்கார் தொழில் நிறுவனங்களிலும், அரசாங்கம் எழுப்பும் கடன்களிலும் குறைந்த வட்டிக்கு முதலீடு செய்யப்படுகிறது. அதிக வருமானம் கிடைக்கக்கூடிய தனியார் தொழில்களின் பங்குகளிலும், கடன் பத்திரங்களிலும் குறைந்த தொகையே விடுமுதல் ஆகிறது. மக்களிடமிருந்து வசூலிக்கப்பட்ட தொகையைத் தர்ம கர்த்தா நிலைமையில் மக்களின் நன்மைக்காகப் பயன்படுத்த வேண்டியது முறை. ''யோக க்ஷேமம் வஹாம்யஹம்'' என்பது எல்.ஐ.ஸி.யின் பிரமாண வாசகம். ஆனால் நடைமுறையில் திறமையற்ற 'சர்க்கார்தொழிலின் யோகக்ஷேம'த்தை மட்டுமே எல்.ஐ.ஸி. கருத்தில் கொண்டு செயல்படுவதாகக் காண்கிறது.

இப்போது ஆயிரம் கோடி ரூபாயாக உள்ள இன்ஷ்யூரன்ஸ் பாதுகாப்பு வர்த்தகத்தை இரண்டாயிரம் கோடி ரூபாயாக உயர்த்த இலக்கு வைத்துள்ளனர். இந்த இலக்கை அடைய இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பரேஷன் செயல்படும்போது மக்களுடைய உண்மையான நலனுக்கு ஏற்பட்டது இன்ஷ்யூரன்ஸ் என்பதை அது நினைவில் வைத்திருக்க வேண்டியது மிகவும் அவசியம்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

தேசிய ரீதியில் நாம் முன்னேற வேண்டு மானால் நம் நாட்டில் பொதுவான ஒரு தொடர்பு மொழியிருக்க வேண்டும்; இது ஆங்கிலமாகத்தான் இருக்க முடியும்; ஹிந்தி அல்ல; இத்தொடர்பு மொழியில் நம் ராஜ்யத்தவர் நல்ல தேர்ச்சி பெற்றால்தான் நாம் வாழ முடியும் — இந்த உண்மையில் நமக்கு உறுதியிருக்குமாயின், நாம் செய்ய வேண்டிய ஒரே காரியம் ஆங்கில ஞானத்தை அபிவிருத்தி செய்ய வழி காண்பதுதான்.

வெறும் சூனியத்தில் ஒரு மொழியைப் புகட்ட முடியாது. நமது தாய்மொழியல்லாத மற்ற எந்த மொழியையுமே ஸ்தூலமான விஷயங்களைக் குறித்த பாடங்களின் மூலம்தான் கற்பிக்க முடியும். ஆங்கிலத்தைக் கல்வித் திட்டத்தில் அது இன்று பெற்றுள்ள இடத்திலிருந்து அகற்றாமலே நமது தாய் மொழி யறிவை அபிவிருத்தி செய்ய முடியும். அப்படித்தான் செய்ய வேண்டும்.

ஹிந்தியை இந்தியாவின் தேசிய மொழியாகவும் ஆட்சி மொழியாகவும் ஆக்க உறுதி கொண்டிருப்பவர்கள், ஹிந்தி வழங்காத ராஜ்யங்களிடையே பரஸ்பரத் தொடர்பின்றி, அவை தனித் தனியே பிரிந்திருக்க வேண்டும் என விரும்புகின்றனர். இதனால் இந்த ராஜ்யங்கள் தங்களது பிரதேச மொழியில் மட்டும் கவனம் செலுத்துவதை ஊக்குவிக்கின்றனர். இந்த ராஜ்யங்களின் மாணவர்களிடையே தாய்மொழி என்ற வேலியைப் போட்டு, அவர்கள் பரஸ்பரம் தொடர்பு கொள்ளாமல் இருப்பதற்கு ஹிந்தி ஆதரவாளர் உதவியே செய்வர். இவ் விஷயத்தில் திரு கருணாநிதியும் அவரது சகாக்களும் போதிய விழிப்புடன் இல்லை எனத் தோன்றுகிறது. ஹிந்தி வெறியர்கள் வெளிப்படக் காட்டாமலிருக்கும் சூழ்ச்சியைச் சக்தியுடன் எதிர்த்து நமது [illegible] ங்கிலத்தைத் தொடர்பு மொழ[illegible] கருவதற்கான காரியங்களைச் செய்தாலே அது முடியும்.

தாய்மொழியறிவை வளர்ப்பதற்காக மேற்கொள்ள வேண்டிய வழி வேறு; ஆங்கில அபிவிருத்திக்குச் செய்ய வேண்டியது வேறு. தாய் மொழி இயல்பாகவே மாணவருக்குத் தெரிந்ததுதான். அதில் அவர்களுக்கு அஸ்திவாரம் இருக்கிறது. ஆங்கிலத்தின் விஷயம் இதுவல்ல.

சுருக்கமாகச் சொன்னால், உயர் கல்வியில் போதனை மொழியாக உள்ள ஆங்கிலத்தின் ஸ்தானத்தைக் குறைப்பது தற்கொலைக்கு ஒப்பாகும். ஆங்கிலத்தை உயர் கல்விப் பயிற்றுமொழியாக வைக்காமலே, அதை எப்படியோ போதித்து மாணவருக்குத் தேர்ச்சி உண்டாக்கலாம் என்று நினைப்பது நடைமுறையில் படுதோல்வியடையும்.

★

தமிழக முதன் மந்திரி நமது ராஜ்யத்தில் மது தயாரித்து, வெளியாருக்கு ஏற்றுமதி செய்வதற்குத் திட்டம் வைத்திருக்கிறார். இதற்கு அதிகாரம் வழங்கும் விதத்தில் சட்டசபையில் மதுவிலக்குச் சட்டத்துக்குத் திருத்தம் நிறைவேறியுள்ளது. இதனால் ராஜ்யத்தின் மதுவிலக்கு பாதிக்கப்படாது என்றும், சர்க்காரின் வருமானத்தைப் பெருக்குவதற்கே இத்திட்டம் என்றும் முதன் மந்திரி மெய்யாகவே நம்புகிறார்.

ஆனால் இது தவறான எண்ணம். தமிழகத்திலிருந்து தயாரித்து அனுப்பும் மது பிரான்ஸிலிருந்தும், ஸ்காட்லாந்திலிருந்தும் இறக்குமதி செய்யப்படும் மதுவுடன் போட்டியிட்டாக வேண்டும். இந்தப் போட்டியில் அது படுதோல்வியே அடையும் என்று நினைக்கிறேன். இதனால் நஷ்டம்தான் ஏற்படுமேயன்றி, லாபம் உண்டாகாது [எனக் கருதுகிறேன்.

வியாபார ரீதியில் இவ்விதம் லாபநஷ்டம் பார்ப்பது ஒருபுறமிருக்க. நம் ராஜ்ய மக்கள் மது அருந்தலாகாது என்று சட்டம் செய்துள்ள நாம், மற்றவர் மது அருந்துவதற்காக மது உற்பத்தி செய்வதற்குத் தார்மீக அடிப்படையில் சமாதானமே சொல்வதற்கில்லை. இதனால் நம் ராஜ்யத்தில் மதுவிலக்குச் சட்டத்தை மீறி நடப்பதற்குச் சபலமும் வாய்ப்பும் அதிகமாகும். திருத்த மசோதாவைச் சட்டசபையில் எதிர்த்தவர்கள் செய்ததே சரி; தார்மீக ரீதியிலும், நீதி அடிப்படையிலும் சர்க்கார் ஒரு பெருந் தவறு செய்து விட்டது.

சட்டத்தைத் திருத்தி மது உற்பத்திக்கு அதிகாரம் பெற்றுவிட்ட போதிலும், உத்தேசத் திட்டத்தைக் கைவிடுவதே முறை. ஆப்பிள், திராட்சை முதலியவற்றிலிருந்து நாம் மது தயாரிக்க முடியாது. எனவே, நமக்கு அவசியமான தானியங்களிலிருந்தோ கரும்பிலிருந்தோதான் மது காய்ச்ச வேண்டியிருக்கும். லாபம் கிடைக்கும் என்ற தவறான எண்ணத்தில் உணவுப் பண்டத்தை இவ்விதம் போதைப் பொருளாக்கச் செலவழிப்பது மகத்தான தவறாகும்.

★

இந்தியா அரசியல் விடுதலை கண்டபின் தோன்றிய தலைமுறையானது நம் சமுதாயத்தைப் பலமற்றதாக்கி விட்டது. ருசியான சாப்பாடு, திரைப்படங்கள், நரம்பைத் தூண்டும் நாவல் இவற்றோடு இன்றைய மக்கள் திருப்தி அடைந்து விடுகின்றனர். துணிந்து செயல்களில் இறங்கி நேரடியாக அநுபவம் பெறும் உற்சாகம் போய் விட்டது. எல்லாம் பறி போய் விட்டது என்று முடிவு கட்டி, எது நடந்தாலும் பேசாதிருக்கும் மனப் போக்கு வளர்ந்து விட்டது. இதோடு லஞ்ச ஊழலும் சேர்ந்து தேசத்தின் சித்தப் பண்பையே அதருமத்தில் ஆழ்த்தி விட்டது. நம்முடைய ரிஷிகள் உபதேசித்த சத்தியசீலங்கள் மறைந்து விட்டன. வயது வந்தவர்கள் யாவரும் வோட்டுப்போடும் 'மக்கள் சர்க்காரை' அமைத்ததன் தவிர்க்க முடியாத அங்கம் இது. தன்னலத்தைத் தியாகம் செய்யும் பாங்கும், செயற் துணிவும் மீண்டும் தோன்றுமாக எனப் பிரார்த்திப்போம்.

நான் புலம்பல் தத்துவக்காரனாகிவிட்டேன் என்று தோன்றும். ஆனால், ஒருவர் தம் வாழ்நாள் முழுவதையும் கொடுத்துப் பெற்ற பொருள் நொறுக்கப்படுகையில் — அடிவானத்தில்கூட ஓர் ஒளிக்கீற்றைக் காண முடியாத நிலைமையில் — புலம்புவது தவிர வேறு என்ன செய்ய இருக்கிறது?

# மூதறிஞர்களில் முதல்வர்

## எம். ஸி. சாக்ளா

'ராஜாஜி' என்றால் இந்தியாவில் எல்லா மூலைமுடுக்குகளிலும் தெரியும். நம்முடைய நாட்டிலுள்ள அரசியல் அறிஞர்களில் அவரே முதன்மை ஸ்தானம் பெறும் மூதறிஞர்.

துரதிருஷ்டவசமாக இன்று ராஜநீதி அறிந்த வல்லுநர்கள் வெகு சிலரே நம் நாட்டில் இருக்கிறார்கள். நம் பொது வாழ்வில் உள்ள பெரும்பாலோர் அப்பட்டமான அரசியல்வாதிகளே. அவர்களுக்குச் சுய முன்னேற்ற வாய்ப்பிலேயே கண். ஏதேனும் ஓர் அந்தஸ்தைப் பெற்று, அதை விடாமல் பிடித்துக் கொண்டிருப்பதிலேயே இவர்களுக்கு நாட்டம். இன்று போலவே எதிர்காலம் **தங்களுக்குப்** பிரகாசமாக இருக்குமா என்பதிலேயே அவர்களுக்குக் குறி.

இவ்விதம் தனது எதிர்காலத்தை எண்ணாமல் **தேசத்தின் — தேச மக்களின் —** எதிர்காலம் ஒன்றிலேயே அனவரதமும் கருத்தைச் செலுத்தி வருபவர் ராஜாஜி. நிகழ்காலத்தை மட்டும் பாராமல் எதிர்காலத்தில் ஈடுபாடு கொண்டிருப்பதே அவரது மையமான பணி.

பௌதிகமாகப் பார்த்தால் அவர் முதுமை எய்திவிட்டார். ஆயினும், அவர் உடல் நலம் குன்றியிருப்பது அபூர்வமே. நிர்ணயமான நியதிகளைக் கொண்டவர்; வேண்டாத வழக்கம் எதுவும் அவரிடம் கிடையாது. செய்யும் செயலனைத்திலும் அவர் கண்டிப்பான ஒழுங்கைக் கடைப்பிடிப்பவர். இதுதான் அவரது ஆரோக்கியத்தின் காரணம். பௌதிக பலம் இப்படி எனில், மனோபலத்திலோ அவர் முப்பது வயதுக்காரரைப் போல் சுறுசுறுப்புடனும் விழிப்புடனும் விளங்குகிறார். மிகவும் சிக்கலான பிரச்னைகளையும் எளிதில் துளைத்துச் செல்லும் அதி கூர்மையான அறிவு அவருடையது.

நான் லண்டனில் ஹைகமிஷனராக இருந்தபோது அவர் என்னோடு தங்கிய இரண்டு அல்லது மூன்று தினங்கள் என் நினைவில் பசுமையாக உள்ளன. அவருக்கு எந்த விஷயத்தைப் பற்றியும் ஆராய்ந்து அறியும் ஆவல் இருப்பதையும், குழந்தை போல் அவர் காட்டிய ஆர்வத்தையும் கண்டேன். அவர் அதற்குமுன் இங்கிலாந்துக்குச் சென்றதில்லை. எனினும், அவர் ஆங்கில இலக்கியத்தில் ஆழத் திளைத்தவர் அல்லவா? எனவே, அவர் டிக்கன்ஸ், அல்லது தாக்கரேயின் நூல்களில் படித்தறிந்த தெருக்கள், கட்டடங்கள் இவை எங்கு உள்ளன என்று என்னிடம் விசாரிப்பார். அதுதான் எனக்கு அவருடன் ஏற்பட்ட முதல் தொடர்பு என்று எண்ணுகிறேன். அவரது எளிமையையும், அவர் பழகும் முறையில் இருந்த ஆகர்ஷணத்தையும், அவரது உள்ளூறியிருந்த நேர்மையையும் கண்டு அவரிடம் மிகுந்த பாசம் கொண்டேன்.

நான் மத்திய மந்திரி சபையில் சேருவதற்குச் சில நாள் முன் சென்னைக்குச் சென்றிருந்தேன். அப்போது ராஜாஜியைச் சந்தித்தேன். அவர் என்னிடம், ''நீங்கள் பொது வாழ்வில் கௌரவமான பெயரை உண்டாக்கிக் கொண்டிருக்கிறீர்கள். அதற்குப் பங்கம் உண்டாகுமாறு ஏதும் செய்யாதீர்கள். அவசியம் ஏற்பட்டால் இதற்காகப் பதவியை ராஜிநாமாச் செய்யவும் தயாராக இருக்க வேண்டும்'' என்றார். நான் பிற்பாடு மந்திரி சபையிலிருந்து விலகும்போது ராஜாஜியின் இந்த உபதேசத்தை மனத்தில் கொண்டிருந்தேன்.

நமக்கு நல்லுரை கூறவும், வழிகாட்டியும் வர அவர் பலப் பல ஆண்டுகள் வாழ்வார் என நம்புகிறேன். நம்முடைய அசகாயசூர இளைஞர்கள் சிலர் அவரைப் பிற்போக்குவாதி என எண்ணுகிறார்கள். ஆனால் உண்மையில் நம் நாட்டில் நடக்கும் விவகாரங்களைக் கண்டு, அதனால் வருந்தி நெஞ்சு புண்ணாகி, எதிரிடை நடவடிக்கை மேற்கொள்கிறார் என்பதே உண்மை.

மறைந்துவிட்ட ஒரு தலைமுறையைச் சேர்ந்தவர் அவர். இன்று பலர் கைவிட்டு விட்ட இலட்சியங்களையும் கொள்கைகளையும் கடைப்பிடித்த தலைமுறை அது. இன்று நாம் எங்கே செல்கிறோம் என்று நமக்கு உணர்த்தி, அதற்காகத் தேசம் செலுத்த வேண்டியிருக்கிற அபராதத்தையும் புரிய வைத்து, நம்மைத் திருத்தும் அவர் இன்று அவசியத் தேவை.



படம்: ராஜாஜியுடன் கட்டுரை ஆசிரியர்.

# எடையைக் குறைப்பது எப்படி?



இந்த ஆண்டில் பத்து பவுண்டு எடை கூடி விட்டது என்றால் கவலைப் பட்டு உணவைக்குறைக்க நினைக்கிறீர்கள்.

பார்க்கப் போனால் பத்துப் பவுண்டு ஏறியதோடு நின்றதே என்று நீங்கள் சந்தோஷப்பட வேண்டும்! ஏனெனில் இந்த ஓர் ஆண்டில் சுமார் அரை டன் முதல் ஒரு டன் வரை எடையுள்ள உணவுப் பொருள்களையும் பானங்களையும் நீங்கள் அருந்தி விருப்பீர்கள்!

நீங்கள் சாப்பிட்டதில் மூன்று சதவீதமேடவில் அதிகப்படி கொழுப்பாகத் தங்கிவிட்டிருக்கிறது. ஆயினும் இதையும் நீங்கள் இழக்கவே விரும்புகிறீர்கள். இதைச் சாதிக்கலாம்தான், வேளைக்கு ஓரிரண்டு வாய் உணவைக் குறைத்துச் சாப்பிடுவதன் மூலம். அதாவது ஆண்டு முழுதும் இப்படிக் குறைத்துச் சாப்பிட்டு இருக்க வேண்டும்.

பலருக்கு ஒரு வாரத்துக்குள்ளோ அல்லது இரு வாரங்களுக்குள்ளோ எடையைக் குறைக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுகிறது. குஸ்திச் சண்டை வீரர்கள், பந்தயக் குதிரை ஓட்டும் ஜாக்கிகள், போன்றோர் ஒன்றிரண்டு மணி நேரத்தில் எடையைக் குறைத்துக் கொள்ள விரும்புகின்றனர். நிறைய வியர்வையைச் சிந்துவதன் மூலம் அவர்கள் இதைச் சாதிக்கின்றனர். உடலில் ஐந்தில் நான்கு பாகம் வெறும் நீரேயானதால் இவ்வாறு எடையை இழக்க முடியும்.

ஆனால் இது உண்மையாக இளைப்பது ஆகாது. பழையபடி உண்ணவும் பானம் அருந்தவும் ஆரம்பித்தால் மறுபடியும் எடை கூடி விடுகிறது.

நிஜமாகவே இளைக்க நீங்கள் ஒன்று, குறைத்துச் சாப்பிட வேண்டும் அல்லது அதிகமாகத் தேகப்பயிற்சி செய்ய வேண்டும். இவற்றில் எதைச் செய்வது? போஷாக்கு நிபுணர்கள் யோசனை சொல்வார்கள்.

அவர்கள் உடலை ஓர் இயந்திரமாகப் பாவித்து, இது எவ்வளவு உழைக்கிறது; எத்தனை எரிபொருள் இதற்குத் தேவை என்று கலோரிக் கணக்குப் போடுகிறார்கள். பல்வேறு உணவுப் பொருள்களின் கலோரி மதிப்பையும் கணிக்கிறார்கள்.

F நீங்கள் தூங்கும்போது மணிக்கு அறுபது கலோரி சக்தி செலவாகிறது. வீட்டு வேலை செய்கையில் 150 கலோரி; நாட்டியம் ஆடும்போது 340 கலோரி — இப்படி கணித்திருக்கிறார்கள். அதிகமாக உடலுழைப்பு இல்லாத மனிதன் ஒரு நாளைக்குச் சுமார் 2500 முதல் 3000 வரை கலோரி சக்தி செலவழிக்கிறான். ஆகவே இந்த அளவுக்கு அதிகமாக அவன் ஒரு நாளைக்கு நூறு கலோரி உட்கொண்டாலும் போதும், வாரத்துக்கு மூன்று அவுன்ஸ் என்ற விகிதத்தில் எடை கூடும். ஒரு வாரத்தில் இரண்டு பவுண்டு எடையை ஒருவன் இழக்க விரும்பினால் அவன் உண்ணும் உணவைப் பாதியாகக் குறைத்துக் கொள்ள வேண்டும்.

இதைவிடத் தேகப்பயிற்சி செய்வதே மேல் என்று நினைக்கிறீர்களா? ஒரு நாளைக்குப் பத்து நிமிஷங்கள் இடைவெளி விடாமல் இரைக்க இரைக்கக் கடுமையான தேகப்பயிற்சி செய்தால் நூறு கலோரிகளை இழக்கலாம். இது கஷ்டம் என்று தோன்றினால் தினம் இரண்டு மைல் ஓடவோ அல்லது நாலு மைல் விறுவிறுப்பாக நடக்கவோ வேண்டும்.

*சிரமப்படாமல் இளைக்க முடியாதா?*

சில மருந்துகள் உண்டு. எல்லாம் ஆபத்தானவை. இவை தேகம் அதிகக் கலோரிகளை இழக்க வைக்கின்றன. பசியை விரட்ட ஒரு மாத்திரை இருந்தால் சௌகரியம். ஆனால் திருப்திகரமான மாத்திரை ஏதும் இதற்குக் கண்டுபிடிக்கப்படவில்லை, இன்றுவரை.

இன்னும் ஒரு வழி இருக்கிறது. உடல் உஷ்ணத்தை ஒரு நிலையில் வைத்திருக்க உணவுச் சக்திதான் பயன்படுகிறது. ஆகவே தண்ணீரைக் குடித்து இளைக்கலாம். வாரத்துக்கு மூன்று அவுன்ஸ் எடை கூடாமல் தடுக்க ஒரு நாளைக்கு ஒரு காலன் வீதம் தண்ணீர் குடிக்க வேண்டும்! அதாவது வழக்கமாக நீங்கள் குடிக்கும் பானங்களைத் தவிர இந்த ஒரு காலன் தண்ணீரையும் அருந்த வேண்டும்! முடியுமா?

— மைக்கேல் ஆர்னல்டு

படம் :
கலியுக குண்டோதரன்: மேற்கு ஜெர்மனியைச் சேர்ந்த ஓட்டல் முதலாளி லுட்விக் பேர்ட்ல் உலகிலேயே தாம்தான் மிகவும் கனமான ஆள் என்கிறார்.
- யு. பி. எஸ்.

# கலன்கள் கொதிக்கட்டும்; நெஞ்சங்கள் குளிரட்டும்

"திருச்சி பாய்லர் தொழிற்சாலையா? திருவாரூர் தேர் ஓடும்படி செய்ததே, அதைத் தானே சொல்கிறீர்கள்?" என்று கேட்பார்கள் பலர். தொழிலகத்தைப் பார்வையிட வந்த பாமரரில் சிலர், "பாய்லர் என்ன விலை ஆகுதுங்க?" என்று கேட்பதும் உண்டு.

"'மூணு கோடி ரூபாய்; தூக்கிக்கிட்டுப் போக மூணு ரயில் வேணும்!' என்றால் அவர்கள் மூர்ச்சை போட்டு விழுந்து விடுவார்கள். ஆகவே, நிதானமாக, இது டீக்கடை பாய்லர் இல்லை என்றும், அனல் மின் நிலையங்களில் பயன்படும் மாபெரும் பாய்லர்கள் தயாரிக்கப்படுகின்றன என்றும் விளக்கிச் சொல்கிறேன்" என்றார் பொதுஜனத் தொடர்பு அதிகாரி உதயபாஸ்கர்.

சுதந்திரம் பெற்ற பிறகு கிராமப்புறங்களிலும் இல்லங்களில் விளக்கேற்றி வைப்பது முதல் பணியாகக் கருதப்பட்டது. தொழில் வளம் பெருகவும் அடிப்படைத் தேவை மின்சாரமே அல்லவா? மின்சார உற்பத்திக்கு டர்பைன் ஜெனரேட்டர்களை இயக்க நீரின் சக்தியைப் பயன்படுத்தலாம். அனல் மின் நிலையங்கள் இதே காரியத்துக்கு நீராவியின் சக்தியை உபயோகிக்கின்றன. மிக அதிக அழுத்தத்தில் நீராவியை வெளிப்படுத்தி ஜெனரேட்டர்களை இயக்க மிகப் பிரும்மாண்டமான ராட்சத பாய்லர்களைத் தயாரிக்கிறது திருச்சி தொழிலகம். பாரத் ஹெவி எலெக்ட்ரிகல் ஸ்தாபனத்தின் ஓர் அங்கமே இது. மற்ற அங்கங்கள் ஹைதராபாத்திலும் ஹரித்துவாரத்திலும் உள்ளன. அவை மின் உற்பத்திக்குத் தேவைப்படும் இதர உபகரணங்களான டர்பைன்கள், ஸ்விட்ச் கியர்கள் போன்றவற்றைத் தயாரிக்கின்றன.

மின் நிலையங்களுக்கு மட்டுமின்றி பாய்லர் தேவைப்படும் ரசாயன உரச்சாலை போன்ற இதர தொழிலகங்களுக்கும் பாய்லர்களைத் தயாரித்து அளிக்கிறது திருச்சி தொழிலகம். தவறான பொருளாதாரக் கொள்கைகள் காரணமாக ஐந்தாண்டுத் திட்டம் பெரும்பாலும் காகிதத் திட்டமாகி வருகிற நிலையில் உள்நாட்டுத் தேவைகளை மட்டுமே நம்பி நஷ்டமடையாமல் துரித நடவடிக்கை எடுத்து அயல்நாட்டு ஆர்டர்களையும் தேடிப் போய்க் கொண்டிருக்கிறது இந்நிறுவனம். இப்படியெல்லாம் முன்யோசனையுடன் காரியங்களைச் செய்வதால் அரசினர் துறை ஸ்தாபனமாயிருந்தபோதிலும் லாபகரமாக இயங்குகிறது.

தொழிலகத்தின் ஆரம்ப கட்டத்திலிருந்தே இந்தச் சுறுசுறுப்பைக் கண்டு வந்திருக்கிறோம். செக்கோஸ்லாவேகிய நாட்டின் ஒத்துழைப்புடன் ஆரம்பமான தொழிலகம் காலஞ்சென்ற திரு கிருஷ்ணனின் உற்சாகமான தலைமையின் கீழ் "திட்டமிட்ட கால அளவில் திட்டமிட்டதைக் காட்டிலும் குறைந்த செலவில் கட்டி முடிக்கப்பட்ட தொழிலகம்" என்று நற்பெயர் வாங்கியது. இரண்டாவது மூன்றாவது நான்காவது ஆண்டுகளில் இது எந்த அளவுக்கு உற்பத்தி செய்யும் என்று அயல்நாட்டு ஆலோசகர்கள் கருதினார்களோ அதற்கு அதிகமாகவே உற்பத்தி செய்து காட்டியது. ஒரே ஆண்டில் நாற்பது சதவீதம் உற்பத்தியைப் பெருக்கி, லாபம் காண ஐந்தாண்டு காலம் பிடிக்கும் என்ற நிபுணர்களின் கருத்தைப் பொய்யாக்கியது.



இதே நேரத்தில் பாய்லர்களும் அதையொட்டிய இதர உபகரணங்களும் இறக்குமதி செய்ய வேண்டிய அவசியமே இல்லாது போய்விட்டதால் அயல்நாட்டுச் செலாவணி பெருமளவு மிச்சமாகியது இந்தியாவுக்கு. சர்க்கார் துறையில் நமக்குப் பழக்கமான ஒரு நிலைக்கு விதிவிலக்கான இந்த ஸ்தாபனம் தமிழ் நாட்டில் இருக்கிறதே, அதற்குத் தமிழரேயான திரு கிருஷ்ணமூர்த்தி தலைமை தாங்கிச் சிறப்புப் பணி புரிகிறாரே என்று நாம் நியாயமான பெருமை அடையலாம்.

திருச்சி பாய்லர் தொழிற்சாலைக்குள் நாம் நுழைந்ததுமே அதன் எல்லை காண முடியாத விஸ்தீரணமும் மாபெரும் கட்டிடங்களும், இயந்திரங்களின் கன பரிமாணங்களும் அவை தயாரிக்கும் பொருள்களின் பிரும்மாண்டமான வடிவங்களும் நம்மைப் பிரமிப்பில் ஆழ்த்துகின்றன. சிறிய தோற்றத்தை மனிதர்களிடம் மட்டுமே இங்கு காண்கிறோம்.

திருச்சிக்கு அருகே திருவெறும்பூரில் அமைந்துள்ள இந்தத் தொழிலகத்தில் எறும்புகளின் சுறுசுறுப்புடன் ஆறாயிரம் பேர்கள் வேலை செய்கிறார்கள். முந்நூறுக்கு மேற்பட்ட இன்ஜினியர்கள் இருக்கிறார்கள். இவர்களில் நாற்பது சதவிகிதத்தினருக்கு வீட்டு வசதி இங்கேயே இருக்கிறது. ஆஸ்பத்திரியும் காண்டீனும் உண்டு. ஆயிரக் கணக்கானோருக்கு டிபன் காப்பி தருவதென்றால் காண்டீனா அது? அது ஒரு சப்பாத்தி தயாரிக்கும் தொழிற்சாலை; இட்டிலி உற்பத்தி செய்யும் நிறுவனம். ஒரு மணி நேரத்தில் முந்நூறுக்கு மேற்பட்ட சப்பாத்திகளை இட்டுத்தரும் இயந்திரங்களும் ஒரு மணி நேரத்தில் நூற்றைம்பது இட்டிலிகளைச் செய்து குவிக்கும் இயந்திரங்களும் இங்கு உண்டு. சமையல்காரர்களைத் தவிர சமையல் அறையில் சகலமும் மின்சாரத்தால் இயங்குபவையே!

இட்டிலி தயாரிக்கும் வேகத்தில் இந்தத் தொழிலகம் பாய்லர்களைச் செய்து குவிக்க முடியாததற்குக் காரணம், பாய்லர்கள் அளவில் மிகப் பெரியவை என்பது மட்டுமல்ல; ஒவ்வொரு பாய்லரும் அந்தந்த அனல் மின் நிலையத்தின் அல்லது தொழிலகத்தின் தேவைக்கேற்பப் பிரத்தியேகமாகத் தயாரிக்கப்பட வேண்டும் என்பதும்தான். ஒவ்வொரு பாய்லரையும் நுணுக்கமானதும், முக்கியமானதுமான வேறுபாடுகளைப் புகுத்தி வரைபடத்திலிருந்து தொடங்கி உருவாக்கிச் செய்து முடிக்க வேண்டும்.

இவ்வாறு தயாராகும் பாய்லர்களின் கன பரிமாணங்கள் எத்தகையன என்பதை உணர ஒருசில உதாரணங்கள் பார்ப்போம்.

---

- □ இந்தியாவில் தயாரான முதல் நூறு மெகாவாட் பாய்லர் உருளை.
- □ அனல் மின் நிலையம் நிறுவப்படுகிறது.
- □ கனமான இரும்புத் தகடுகளை அனாயாசமாக வளைக்கும் இயந்திரம்.
- □ பாய்லருக்குள் குழாய்கள் அளிக்கும் எழில் கோலம்.
- □ காண்டீன் சமையலறையில் சகலமும் மின்சாரமே.









ஒரு பாய்லருக்குள் இருக்கும் பல்வேறு அளவினதான எஃகுக் குழாய்களை எடுத்து நிமிர்த்தி ஒன்றன் பின் ஒன்றாய் வைத்தால் அவை தொண்ணூறு கிலோ மீட்டர் நீளம் வளரும்! குழாய்களை வளைக்கவென்று இங்கு ஓர் இயந்திரம் உள்ளது. 32 மில்லி மீட்டர் கனமுள்ள எஃகுச் சுவருடன் 425 மில்லி மீட்டர் விட்ட அளவுள்ள குழாய்களை இஷ்டப்படி வளைக்கும் சக்தி கொண்டது இந்த இயந்திரம். ஒரு ஸ்கேலைப் பக்கத்தில் வைத்துக்கொண்டு இதுபற்றிச் சற்று நேரம் யோசித்துப் பாருங்கள்; திகைப்பாய் இருக்கும்.

இன்னொரு ராட்சத இயந்திரம்: இது எட்டு மீட்டர் நீளமும் அறுபது மில்லி மீட்டர் கனமும் உள்ள எஃகுத் தகடுகளை வளைத்து உருளைகளாகச் செய்து தருகிறது. இந்த உருளைகளுக்குள் ஒரு யானைக் குட்டி புக முடியும்! செந்தணலாகப் பழுக்கக் காய்ச்சிய எஃகுத் தகடானால் 120 மில்லிமீட்டர் கனமுள்ள எஃகுத் தகட்டையும் இதே இயந்திரம் வளைத்து உருளையாக்கும் சக்தி படைத்தது. ஆயிரம் டிகிரி செண்டிகிரேடுக்குத் தகட்டைப் பழுக்கக் காய்ச்ச உலை உண்டு.

இப்படி ஒன்று இரண்டா, எத்தனையோ பல ராட்சத இயந்திரங்கள் மனிதனுக்கு அடிமையாகிச் சொன்னபடி கேட்டுக் கொண்டு சமர்த்தாகப் பணி புரிகின்றன.

பாய்லர்கள் மட்டுமின்றி, பாய்லருடன் தேவைப்படும் இதர உபகரணங்களையும் தயாரிக்கிறது பாய்லர் தொழிற்சாலை. இதற்கு ஒரே ஒரு உதாரணம் பார்ப்போம்.

பாய்லரில் பயன்படுத்தப்படும் நிலக்கரி இருக்கிறதே, அதை முதலில் நன்கு பொடி செய்துதான் உபயோகிக்க வேண்டும். அப்போதுதான் நிலக்கரியின் அனல் சக்தி முழுமையாகப் பாய்லருக்குக் கிடைக்கும். இந்தப் பொடி, பெண்மணிகள் முகத்தில் பூசிக் கொள்ளும் பவுடரை விடச் சிறிதான துகள்களாக இருக்க வேண்டும்! அந்த விதமாக நிலக்கரியைப் பொடி செய்து தரும் இயந்திரத்தை இத் தொழிலகத்தில் உருவாக்குகிறார்கள். இவ்வாறே வேறு பல உபகரணங்களும் தயாராகின்றன.

உள்நாட்டிலும் வெளிநாடுகளிலும் மின்சார உற்பத்திக்குத் திருச்சி பாய்லர் தொழிலகம் உதவுவது ஒருபுறமிருக்க, திருச்சி வாசிகளுக்கு மிகப் பெரிய நன்மைகளை நேர்முகமாயும் மறைமுகமாயும் செய்து தந்திருக்கிறது. இந்தத் தொழிலகம் இங்கு ஏற்பட்டதின் பின்விளைவாகத்தான் ராணு. ஃ உபகரணங்களுக்கான ஒரு தொழிலகம், ஒரு பொறி இயல் கல்லூரி, ஒரு பாலி டெக்னிக், ஒரு தொழில் துறைப் பயிற்சிப் பள்ளி ஆகியனவெல்லாம் அருகில் தோன்றியுள்ளன. இவை கல்வி பெருகவும், வேலை வாய்ப்புக்கள் அதிகரிக்கவும் சுற்று வட்டாரத்தினருக்கு உதவுகின்றன.

இருபத்து நாலு கோடி ரூபாய் செலவில் தமிழ் நாட்டின் மிகப் பெரிய மெக்கானிகல் இன்ஜினீரிங் நிறுவனமாக உருவாகியுள்ள பாய்லர் தொழிற்சாலையின் எதிர்காலம் எப்படி இருக்கும் என்பதற்கு ஜெனரல் மானேஜர் திரு கிருஷ்ணமூர்த்தி சொல்கிறார்:

"'அனல் மின் நிலையம் நிறுவ வேண்டுமா? சரி, பாய்லருக்கு ஆர்டர் கொடு!' என்கிற காரியம் இல்லையே இது. ஒரு பாய்லருக்கான ஆர்டரைப் பூர்த்தி செய்யச் சுமார் முப்பத்தாறு முதல் நாற்பது மாதங்கள் வரை ஆகும். ஆகவே நாட்டின் எதிர்காலத் தொழில்வளப் பெருக்கம், மின்சாரத் தேவைகள் ஆகியவற்றையெல்லாம் கணித்து எந்தெந்த ஆண்டில் எந்தெந்த அளவுக்குப் பாய்லர்களும் இதர உபகரணங்களும் தேவை என்பதை நிர்ணயித்து எங்களுக்குச் சொல்ல வேண்டும். அனல்மின் நிலையங்களை நிறுவப் போட்ட திட்டங்களைத் தீர்மானத்துடன் அரசினர் நிறைவேற்றவும் வேண்டும். இந்த ஒத்துழைப்பு எங்களுக்குக் கிடைத்தால் பாய்லர் தொழிற்சாலை இப்போது பெற்றிருக்கும் நற்பெயர் பன்மடங்காகப் பெருகித் தமிழகத்துக்கு மேலும் புகழ் சேர்க்கும்."

— வி. ராஜேந்திரன்

# புதிய மேயரை வரவேற்கிறோம்!

சென்னை நகரின் 70–71ஆம் வருஷத்திய மேயராகத் தி. மு. க.வைச் சேர்ந்த திரு சா. கணேசன் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பதை அறிந்து மகிழ்கிறோம். திரு சா. கணேசன், 1959ம் ஆண்டிலிருந்து தொடர்ந்து சென்னை நகரமன்ற உறுப்பினராக இருந்து வந்திருக்கிறார். பல கமிட்டிகளிலும் இருந்து பணியாற்றியிருக்கிறார். ஆகவே, சென்னை நகரப் பிரச்னைகள் யாவும் நன்கு தெரியும். இவர் பதவிக் காலத்தில் ஊக்கமாகப் பல பிரச்னைகளைத் தீர்க்க முயல்வார் என்பதில் ஐயமில்லை.





அவருக்குத் துணைவராக முஸ்லிம் லீக் உறுப்பினர் திரு ஆர். ஷெரீப்யான் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பது மகிழ்ச்சிக்குரிய விஷயமாகும். இவரும் 1964 லிருந்து நகரமன்ற உறுப்பினராக இருந்து வருகிறார்.

இவர்கள் பதவிக் காலத்தில் சென்னை நகரம் பல முன்னேற்றங்களைக் காணும் என்று எதிர்பார்ப்போமாக!



கரூர் வைஸ்யா பாங்க் சேர்மன் திரு G. S. அண்ணுசாமி அவர்கள் குமாரர் சிரஞ்சீவி **சுந்தரேசன்** அவர்களுக்கும், சேலம் திரு P. M. நடராஜ அய்யர் அவர்கள் குமாரத்தி சௌபாக்கியவதி **ராஜேசுவரி**க்கும் சென்னையில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்!



பம்பாய் 'பவன் ஜர்னல்' பத்திரிகையின் சர்குலேஷன் மானேஜர் ஸ்ரீ K. R. N. ஸ்வாமி அவர்கள் குமாரத்தி சௌ. **சீதா**வுக்கும், பம்பாய் இன்டர்பப்ளிசிட்டி ஸ்தாபனத்தைச் சார்ந்த சிரஞ்சீவி T. N. **மூர்த்தி**க்கும் பம்பாயில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்!

## பிரபல திருமணம்



பம்பாய் பிரமுகரும், ஷண்முகானந்த சபை நிர்வாகிகளில் ஒருவருமான பத்மஸ்ரீ டி.வி. ராமானுஜம் அவர்களின் புதல்வர்

சிரஞ்சீவி **வரதராஜ**னுக்கும்,

கான்பூர் ஸ்ரீ எஸ். கே. சாரி அவர்களின் புதல்வி

சௌபாக்கியவதி **மல்லிகா**வுக்கும் சமீபத்தில் திருமணம் சென்னையில் சிறப்பாக நடைபெற்றது. திருமணத்துக்கும் அதையொட்டி பம்பாயில் நடைபெற்ற வரவேற்புக்கும் மந்திரிகளும் சங்கீத வித்வான்களும் சினிமா நடிகர்களும் நீதிபதிகளும் தொழிற் பிரமுகர்களும் பத்திரிகை ஆசிரியர்களும் வருகை தந்து மணமக்களை வாழ்த்தினர். மணமக்களுக்கு ஏராளமான வாழ்த்துக்களும், பரிசுகளும் வந்து குவிந்தன.

வாழ்க மணமக்கள்!

# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

நாற்பத்திமூன்றாம் அத்தியாயம்

## "புலி எங்கே?"

ஆதித்த கரிகாலர் எப்பேர்ப்பட்ட ஆபத்தில் அகப்பட்டுக்கொண்டார் என்பதை வந்தியத்தேவன் கவனித்தான். கண்மூடித் திறக்கும் நேரத்தில் குதிரையைச் செலுத்திக் கொண்டு வந்து பன்றியின்மீது தன் கையிலிருந்த வேலைச் செலுத்தினான். வேல் பன்றியின் முதுகுத் தோலின் மீது மேலாகக் குத்தியது. பன்றி உடம்பை ஒரு குலுக்குக் குலுக்கிக் கொண்டு திரும்பியது. அந்த வேகத்தில் வந்தியத்தேவன் கையில் பிடித்திருந்த வேலின் பிடி நழுவிவிட்டது. பன்றியின் முதுகில் இலேசாகச் சென்றிருந்த வேல் நழுவிக் கீழே விழுந்தது.

பன்றி இப்போது வந்தியத்தேவன் பக்கம் திரும்பி ஓடி வந்தது. அவன் தன் அபாயகரமான நிலைமையை உணர்ந்தான். பன்றியின் தாக்குதலுக்கு அவனுடைய குதிரையினால் ஈடு கொடுக்க முடியாது. கையில் வேலும் இல்லை. இளவரசரோ இன்னமும் குதிரையின் கீழிருந்து வெளிப்படுவதற்கு முயன்று கொண்டிருக்கிறார். தான் குதிரை மேலிருந்தபடி ஏதாவது ஒரு மரத்தின் மேல் தாவி ஏறிக்கொண்டால்தான் தப்பிப் பிழைக்கலாம். சீச்சீ! எத்தனையோ அபாயங்களுக்குத் தப்பி வந்து கடைசியில் கேவலம் ஒரு காட்டுப் பன்றியினாலேயா கொல்லப்பட வேண்டும்?....

நல்ல வேளையாக அருகிலேயே தாழ்ந்து படர்ந்த மரம் ஒன்று இருந்தது. வந்தியத்தேவன் குதிரைமீதிருந்து பாய்ந்து மரத்தின் கிளை ஒன்றைத் தாவிப் பிடித்துக் கொண்டான். கால் முதல் தோள் வரையில் அவனுடைய பலத்தை முழுதும் பிரயோகித்து எழும்பிக் கிளைமீது ஏறிக்கொண்டான். அதே சமயத்தில் பன்றி அவனுடைய குதிரையை முட்டியது. குதிரை தட்டுத் தடுமாறிக் கீழே விழப் பார்த்துச் சமாளித்துக் கொண்டு அப்பால் ஓடியது.

கரிகாலர் இன்னமும் குதிரையின் அடியில் கிடந்தார். வந்தியத் தேவன் மரக் கிளைமீது இருந்தான். காட்டுப் பன்றி இருவருக்கும் நடுவில் நின்று இப்படியும் அப்படியும் திரும்பிப் பார்த்தது.

இரண்டு எதிரிகளில் யாரைத் தாக்கலாம் என்று அந்தக் காட்டுப் பன்றி யோசனை செய்கிறது என்பதை வந்தியத் தேவன் அறிந்தான். இளவரசர் இன்னும் குதிரைக்கு அடியிலிருந்து விடுவித்துக் கொண்டு வெளிவந்தபாடில்லை. வெளிவந்துவிட்டபோதிலும் பன்றியின் தாக்குதலை அவரால் அச்சமயம் சமாளிக்க முடியுமா என்பது சந்தேகந்தான். அவர் கையில் உடனே பிரயோகிக்கக் கூடிய ஆயுதம் இல்லை. வில்லை வளைத்து அம்பு விடவேண்டும். குதிரைக்கு அடியில் விழுந்து அகப்பட்டுக் கொண்டதில் அவருக்குப் பலமான காயம் பட்டிருந்

தாலும் பட்டிருக்கலாம். எப்படியும் இளவரசருக்குச் சிறிது சாவகாசம் ஏற்படுத்திக் கொடுப்பது அவசியம். இவ்வளவையும் மின்னல் மின்னும் நேரத்தில் வந்தியத்தேவன் யோசனை செய்து ஒரு முடிவுக்கு வந்தான். தான் ஏறியிருந்த மரக் கிளையைப் பலமாக உலுக்கி ஆட்டிக்கொண்டே, ''ஆகா! ஊகூ!'' என்று பெரிதாகச் சத்தமிட்டான்.

அவனுடைய யுக்தி பலித்தது. பன்றி மூர்க்காவேசத்துடன் அவன் ஏறியிருந்த மரத்தை நோக்கிப் பாய்ந்து வந்தது.

''வரட்டும்; வரட்டும். வந்து மரத்தின் பேரில் முட்டிக் கொள்ளட்டும்'' என்று வந்தியத் தேவன் எண்ணிக் கொண்டிருக்கும்போதே அவன் ஏறி உட்கார்ந்து உலுக்கிய மரக் கிளை மட மடவென்று முறிந்தது. கடவுளே! இது என்ன ஆபத்து? — கிளையுடன் தரையில் விழுந்தால்? அடுத்த நிமிடமே பன்றியின் கோரப் பற்கள் அவனைச் சின்னா பின்னமாகக் கிழித்து விடும். வேறு கிளை ஒன்றைத் தாவிப் பிடித்துக்கொண்டால்தான் பிழைக்கலாம். அப்படித் தாவிப் பிடிக்க முயன்றான். பிடிக்க முயன்ற கிளை சற்றுத் தூரத்தில் இருந்தபடியால் ஒரு கை மட்டும்தான் பிடித்தது. பிடித்த கிளை மெல்லியதாயிருந்தபடியால் வளைந்து கொடுத்தது. கைப்பிடி நழுவத் தொடங்கியது. கால்கள் ஊசலாடின. சரி! கீழே விழ வேண்டியதுதான். உடனே மரணம்தான்! சந்தேகமில்லை. ஏதோ கடைசி கடைசியாக ஆதித்த கரிகாலரைக் காப்பாற்ற முடிந்தது அல்லவா? இளைய பிராட்டி இதை அறியும்போது மகிழ்ச்சி அடைவாள் அல்லவா? தன்னுடைய மரணத்துக்காக ஒரு துளிக் கண்ணீர் விடுவாள் அல்லவா?...

ஏதோ ஒரு பயங்கரமான சத்தம் கேட்டது. அதே சமயத்தில் கைப்பிடியும் நழுவிவிட்டது! வந்தியத் தேவன் கண்களை இறுக மூடிக் கொண்டான். தடால் என்று கீழே விழுந்தான். விழும்போதே நினைவை இழந்தான்!

**வ**ந்தியத் தேவன் நினைவு வந்து கண் விழித்துப் பார்த்தபோது ஆதித்த கரிகாலர் அவன் முகத்தில் தண்ணீர் தெளித்துக் கொண்டிருப்பதைக் கண்டான். சட்டென நிமிர்ந்து எழுந்து உட்கார்ந்து, ''இளவரசே! பிழைத்திருக்கிறீர்களா?'' என்றான்.

''ஆமாம்; உன்னுடைய தயவினால் இன்னும் பிழைத்திருக்கிறேன்'' என்றார் ஆதித்த கரிகாலர்.

''காட்டுப் பன்றி என்ன ஆயிற்று?'' என்று கேட்டான்.

''அதோ!'' என்று இளவரசர் சுட்டிக் காட்டிய இடத்தில் காட்டுப் பன்றி செத்துக் கிடந்தது.

வந்தியத் தேவன் அதைச் சற்று உற்றுப் பார்த்துவிட்டு, ''அரசே! இவ்வளவு சின்ன உருவமுள்ள பிராணி என்ன பாடு படுத்திவிட்டது! கந்தமாறன் காட்டுப் பன்றியைக் குறித்துச் சொன்னது அவ்வளவும் உண்மைதான். கடைசியில் அதை எப்படித்தான் கொன்றீர்கள்?'' என்று கேட்டான்.

''நான் கொல்லவில்லை. உன்னுடைய வேலும் நீயுமாகச் சேர்ந்துதான் கொன்றீர்கள்!'' என்றார் இளவரசர்.

வந்தியத் தேவன் அதன் பொருள் விளங்காதவனைப் போல் இளவரசரின் முகத்தைப் பார்த்தான்.

''என்னுடைய வேலைத் தாங்கள் நன்றாக உபயோகப்படுத்தியிருக்கிறீர்கள். ஆனால் நான் ஒன்றும் செய்யவில்லையே! ஆபத்தான சமயத்தில் தங்களுக்கு உதவி செய்ய முடியாதவனாகி விட்டேனே!'' என்றான்.

''நீ மரக் கிளையைப் பிடித்து உலுக்கிச் சத்தமிட்டாய் அல்லவா? அப்போது நான் குதிரை அடியிலிருந்து வெளிவந்து உன் வேலை எடுத்துக் கொண்டேன். என் மனத்தில் கொந்தளித்துக்





கொண்டிருந்த கோபத்தையெல்லாம், பாவம் இந்தப் பன்றியின்மேல் பிரயோகித்தேன். வேலினால் குத்தப்பட்டதும் அது பயங்கரமாகச் சத்தமிட்டது. என் காதே செவிடாகிவிடும் போலிருந்தது. ஆனால் வேலினால் மட்டும் அது சாகவில்லை. நீ மரக் கிளையிலிருந்து நழுவி அதன் பேரில் விழுந்தாய்; அந்த அதிர்ச்சியினால்தான் செத்தது!'' என்று கரிகாலர் சொல்லிவிட்டுச் சிரித்தார். வந்தியத்தேவனும் அதை நினைத்து நினைத்துச் சிரித்தான். உடம்பைத் தடவிப் பார்த்துக் கொண்டு ''பன்றியின்மேல் விழுந்ததினாலேதான் காயமில்லாமல் தப்பினேன் போலிருக்கிறது. மகா

விஷ்ணு வராக அவதாரம் எடுத்து இரணியாட்சனைக் கொன்றார் என்பதை இனி என்னால் நம்ப முடியும்! அப்பா! எவ்வளவு மூர்க்கமான பிராணி!'' என்றான்.

''இந்தச் சிறு காட்டுப் பன்றியைப் பார்த்துவிட்டு வராகாவதாரத்தை மதிப்பிடாதே, தம்பி! வடக்கே விந்திய மலையைச் சேர்ந்த காடுகளிலே தலையிலே ஒற்றைக் கொம்பு உள்ள பன்றி இருக்கிறதாம். ஏறக்குறைய யானை அவ்வளவு பெரிதாயிருக்குமாம். அந்த மாதிரி பன்றியா யிருந்து, நீ ஏறியிருந்த மரத்தை முட்டியிருந்தால் மரம் என்ன பாடுபட்டிருக்கும் என்று யோசித்துப் பார்!'' என்றார் இளவரசர்.

''மரம் அடியோடு முறிந்து விழுந்திருக்கும். தாங்கள் எறிந்த வேலும் முறிந்திருக்கும். நம் கதி அதோகதியாகியிருக்கும். சோழ குலத்தின் எதிரிகளுக்கு வேலை மிச்சமாய்ப் போயிருக்கும்'' என்றான் வந்தியத் தேவன்.

''தம்பி! உண்மையைச் சொல்லு! என் குதிரை தடுமாறி விழுந்தவுடனே நீ வேலை எறிந்தாயே? அந்தக் காட்டுப் பன்றியின்மேல் எறிந்தாயா? என்பேரில் எறிந்தாயா?'' என்று ஆதித்த கரிகாலர் கேட்டார்.

**வ**ந்தியத் தேவன் ஆத்திரத்துடன், ''ஐயா! உண்மையாகவே தாங்கள் இந்தக் கேள்வி கேட்கிறீர்களா? அப்படித் தாங்கள் சந்தேகப்படுவதா யிருந்தால் பன்றியைக் கொன்று என்னைக் காப்பாற்றியிருக்க வேண்டிய அவசியம் இல்லையே?'' என்றான்.

''ஆமாம், ஆமாம். உன் பேரில் சந்தேகப்படக் கூடாதுதான். நீ மரக் கிளையை ஆட்டிக் கொண்டு கூச்சல் போட்டிருக்கா விட்டால் எனக்கே அந்தப் பன்றி யமனாக இருந்திருக்கும். ஆனாலும் நீ வேலை எறிந்தபோது ஒருகணம் எனக்கு அத்தகைய சந்தேகம் உண்டாயிற்று. இப்போதெல்லாம் எனக்கு எதைப் பார்த்தாலும், யாரைப் பார்த்தாலும் வீண் சந்தேகம் தோன்றுகிறது. யமன் என்னைத் தொடர்ந்து வந்து கொண்டே யிருக்கிறான் என்ற பிரமையைப் போக்கிக் கொள்ளவே முடியவில்லை. யமன் இந்தப் பன்றியின் உருவத்தில் என்னைக் கொல்ல வந்ததாகவும் எண்ணினேன்...''

''அப்படியானால் மிக நல்லதாய்ப் போயிற்று. அரசே! தங்களைத் தொடர்ந்து வந்த யமன் செத்தொழிந்தான். இனி என்ன கவலை? கந்தமாறனோடு நாம் போட்டியிட்ட பந்தயத்திலும் ஜயித்து விட்டோம். பன்றியை இழுத்துக்கொண்டு போக வேண்டியது தானே? புறப்படலாம் அல்லவா?'' என்றான் வல்லவரையன்.

''புறப்பட வேண்டியதுதான். ஆனால் அவசரம் என்ன? சற்று இங்கே தங்கிக் களைப்பு ஆறிவிட்டுப் போகலாம்'' என்றார் இளவரசர்.

''தாங்கள் களைப்பு அடைந்ததாகச் சொல்வதை இப்போதுதான் முதன் முதலாகக் கேட்கிறேன். ஆம், குதிரையின் அடியில் சிக்கி ரொம்பக் கஷ்டப் பட்டுப் போயிருப்பீர்கள்.''

''அது ஒன்றுமில்லை. உடலின் களைப்பைக் காட்டிலும் உள்ளத்தின் களைப்புத்தான் அதிகமாக இருக்கிறது. வந்த வழியாகவே அவ்வளவு தூரமும் காட்டு வழியில் திரும்பிப் போக வேண்டுமா? மறுபடியும் அந்த மூடர்களுடன் சேர்ந்தல்லவா பிரயாணம் செய்ய வேண்டி வரும்? அதைக் காட்டிலும் இந்த ஏரியைக் கடந்து போய் விட்டால் என்ன?''

''கடவுளே! இந்தச் சமுத்திரம் போன்ற ஏரியை நீந்திக் கடக்க வேண்டும் என்று சொல்கிறீர்கள்? பன்றியிடமிருந்து என்னைத் தப்ப வைத்து ஏரியில் மூழ்கடித்துக் கொல்ல வேண்டும் என்று உத்தேசமா?'' என்றான் வந்தியத் தேவன்.

''உனக்கு நீந்தத் தெரியாது என்பது நினைவிருக்கிறது. என்னால் கூட இவ்வளவு பெரிய ஏரியை நீந்திக் கடக்க முடியாது. ஒரு படகு கிடைத்தால் காரியம் சுலபமாகி விடும். சற்று முன் ஒரு படகு பார்த்தோமே, அது எங்கேயாவது சமீபத்தில் கரை ஓரமாகத்தானே தங்கியிருக்கும்? அதைத் தேடிப் பிடித்தால் என்ன?''

''குதிரைகளின் கதி என்ன ஆவது? காட்டு மிருகங்களுக்கு உணவாகட்டும் என்று விட்டு விட்டுப் போய்விடலாமா?'' என்றான் வந்தியத் தேவன். உடனே ஏதோ ஞாபகம் வந்து திடுக்கிட்டவன் போல் துள்ளிக் குதித்து எழுந்து, ''ஐயா! புலி எங்கே?'' என்று கேட்டான்.

''நானும் அதை மறந்து விட்டேன். பக்கத்தில் எங்கேயாவது மறைந்திருக்கப் போகிறது. யமன் பன்றி ரூபத்தில் வராமல் ஒருவேளை புலி ரூபத்திலும் என்னைத் தொடரலாம் அல்லவா?'' என்றார் இளவரசர்.

இருவரும் சுற்று முற்றும் உற்றுப் பார்க்கலானார்கள். சிறிது நேரம்

பார்த்த பிறகு வந்தியத் தேவன், ''அதோ!'' என்று சுட்டிக் காட்டினான்.

ஏரியில் தண்ணீர் கொண்டு வந்து சேர்த்த அந்த வாய்க்கால் வடக்கே போகப் போகக் குறுகலாகிக் கொண்டு சென்றது. அவ்விதம் குறுகலாயிருந்த இடத்தில் வாய்க்காலின்மீது ஒரு பெரிய மரம் விழுந்து இரு கரைகளையும் தொட்டுக்கொண்டிருந்தது. புலி அந்த மரப் பாலத்தின்மீது மெல்ல ஊர்ந்து சென்று அக்கரையை நெருங்கிக் கொண்டிருந்ததை இரண்டு பேரும் கவனித்தார்கள். இரண்டு பேருடைய மனத்திலும் ஒரே எண்ணம் உதித்தது.

''ஆகா! படகிலே வந்த பெண்கள்!'' என்று இருவரும் ஏககாலத்தில் வாய் விட்டுக் கூறினார்கள்.

பின்னர், ''இந்த வாய்க்காலை அடுத்துள்ள தீவின் கரையிலேதான் அந்தப் பெண்கள் இறங்கி யிருக்க வேண்டும்'' என்றான் வல்லவரையன்.

''காயம்பட்ட சிறுத்தை மிக அபாய கரமானது'' என்றார் இளவரசர்.

''பன்றியுடன் புலியையும் கொன்று எடுத்துப் போகத்தான் வேண்டும்.''

''இந்த வாய்க்காலை எப்படித் தாண்டுவது? குதிரைகள் மரப்பாலத்தின் மேல் போக முடியாதே!''

''தண்ணீர் கொஞ்சமாகத்தான் இருக்கும். இறங்கிப் போகலாம்.''

கரிகாலரின் குதிரையும் அதற்குள் எழுந்து வந்தியத்தேவன் குதிரைக்கு அருகே போய் நின்று கொண்டிருந்தது. எஜமானர்கள் அந்தரங்கம் பேசியது போல் அவையும் தங்களுக்குச் சற்று முன் நேர்ந்த அபாயத்தைப் பற்றிப் பேசிக் கொண்டன போலும்.

இருவரும் தத்தம் குதிரை மீது தாவி ஏறினார்கள். வாய்க்காலில் குதிரைகளை இறக்கினார்கள்.

வாய்க்காலில் தண்ணீர் அதிகமாக இல்லைதான். ஆனால் சேறும் உளையும் அதிகமாயிருந்தன. குதிரைகள் தட்டுத் தடுமாறித் தத்தளித்துச் சென்றன.

கோடிக்கரைப் புதைசேற்றுக் குழிகளை நினைத்துக் கொண்டு வந்தியத் தேவன், ''இந்தச் சேறு ஒன்றும் பிரமாதமில்லை'' என்று தைரியமடைந்தான். அதைப் பற்றிக் கரிகாலருக்குச் சொல்லவும் தொடங்கினான்.

''நண்ப! வெளியிலுள்ள சேற்றைப் பற்றிச் சொல்லப் போய் விட்டாயே? மனிதர்களுடைய உள்ளத்தில் உள்ள சேற்றைக் குறித்து என்ன கருதுகிறாய்? ஒரு தடவை தீய எண்ணமாகிற சேற்றில் இறங்குகிறவர்கள் மீண்டும் கரை ஏறுவது எவ்வளவு கடினம் தெரியுமா?'' என்று கரிகாலர் கேட்டார். இளவரசரின் உள்ளம் உண்மையில் சேறு போலக் குழம்பியிருக்கிறது என்று வந்தியத் தேவன் எண்ணிக் கொண்டான்.

---

கவிஞர் கொத்தமங்கலம் சுப்பு அவர்கள் வீட்டுக்கு ஒரு நாள் குழந்தைக் கவிஞர் சென்றிருந்தார். ''வள்ளியப்பா! நீதான் குழந்தைக் கவிஞர் என்று நினைத்துக் கொள்ளாதே. இங்கு எங்கள் வீட்டிலும் ஒரு குழந்தைக் கவிஞர் இருக்கிறார். வரவழைக்கட்டுமா?'' என்று கேட்டார் சுப்பு. புன்னகையோடு தலை அசைத்தார் குழந்தைக் கவிஞர்.



சுப்பு வீட்டுக்குள் சென்றார். ஐந்து வயதுப் பையனை அழைத்து வந்தார். ''டேய்! உன் பாட்டை இவரிடம் பாடிக் காட்டு!'' என்று கூறினார். உடனே சிறுவன் பாடத் தொடங்கினான்:

''பாட்டி பாட்டி பாட்டி
பாட்டி புடவை ரெண்டாக் கிழிஞ்சா
வேட்டி வேட்டி வேட்டி!''

பொடியனின் பாட்டைக் கேட்டதும் குழந்தைக் கவிஞர் பொறுமை கொள்ளவில்லை; பூரித்தார். அவனை அருகில் அழைத்துத் தட்டிக் கொடுத்தார். ஏன் தெரியுமா?

''நில் நில் நில்
நில்லா விட்டால் உடனே ஓடிச்
செல் செல் செல்!
சொல் சொல் சொல்
சொல்லித் தந்த பாட்டிக் கெங்கே
பல் பல் பல்!''

என்ற குழந்தைக் கவிஞரின் பாடல்தான் அந்தக் குழந்தையைக் 'கவிஞர்' ஆக்கிவிட்டது! அந்த ரகசியம் அறிந்தவர் ஆயிற்றே அவர்! அதனால் ரசித்தார்!

- திருச்சி பாரதன்

(குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா குழந்தை இலக்கியப் பணி வெள்ளி விழா மலரில்)

குதிரைகள் மிகப் பிரயாசையுடன் அக்கரையை அடைந்தன.

காட்டுக்குள்ளே மிக ஜாக்கிரதையுடன் நாலாபுறமும் உற்றுப் பார்த்துக் கொண்டு இருவரும் சென்றார்கள்.

கரிகாலரின் கையில் வில்லும் அம்பும் தயாராயிருந்தன.

வந்தியத்தேவன் தன் வேலையும் புலியின் பேரில் எறிவதற்கு ஆயத்தமாக வைத்துக் கொண்டிருந்தான்.

திடீரென்று, காட்டில் சாதாரணமாகக் கேட்கும் சத்தங்களை அடக்கிக் கொண்டு ஒரு பெண்ணின் 'கிறீச்' என்ற குரல், ''அம்மா! அம்மா! புலி!'' என்று கதறுவது கேட்டது.

மணிமேகலை மரக்கிளையின் மீது சிறுத்தையைப் பார்த்த அதே சமயத்தில் வஸந்த மண்டபத்தில் சமையல் வேலையில் ஈடுபட்டிருந்த தோழிப்பெண் ஒருத்தியும் அந்தப் புலியைப் பார்த்து விட்டு அவ்விதம் அலறினாள்.

அந்தக் குரல் இரு நண்பர்களின் செவிகளிலும் விழுந்து ரோமாஞ்சனத்தை உண்டுபண்ணியது.

குதிரைகளை வேகமாகச் செலுத்திக் கொண்டு குரல் வந்த திசையை நோக்கி அவர்கள் சென்றார்கள்.

ஏரிக் கரையின் ஒரு திருப்பம் திரும்பியதும் அவர்கள் கண்ட காட்சி இருவரையும் திடுக்கிட்டுத் திகில் கொள்ளும்படி செய்து விட்டது.

நந்தினியும் மணிமேகலையும் படித்துறையில் குளிப்பதற்காக இறங்கிக் கொண்டிருந்த சமயத்தில், அருகில் சாய்ந்திருந்த மரக்கிளை ஒன்றின்மீது சிறுத்தை சிறிது சிறிதாக ஊர்ந்து மேலேறிக் கொண்டிருந்தது.

பன்றியோடு போட்ட சண்டையில் நன்றாக அடிபட்டுக் காயமுற்றிருந்த அந்தச் சிறுத்தை அப்போது தன் உயிரைக் காப்பாற்றிக் கொண்டால் போதும் என்ற நிலையில் இருந்தது.

ஆனால் இது அந்தப் புலியைத் தவிர வேறு யாருக்கும் தெரிந்திருக்கவில்லை.

அடுத்த கணம் சிறுத்தை தண்ணீரில் நின்ற பெண்களின் மீது பாயப் போகிறதென்று கரிகாலரும் வந்தியத்தேவனும் எண்ணினார்கள்.

வந்தியத்தேவன் வேலை உபயோகிக்கத் தயங்கினான். வேல் தவறிப் பெண்களின் மீது விழுந்து விட்டால் என்ன செய்வது என்று பயந்தான்.

கரிகாலருக்கு அத்தகைய தயக்கம் ஒன்றும் ஏற்படவில்லை. வளைத்திருந்த வில்லில் அம்பைக் கோத்து நன்றாகக் குறி பார்த்து இழுத்து விட்டார்.

அம்பு விர்ரென்று சென்று சிறுத்தையின் அடிவயிற்றில் பாய்ந்தது.

சிறுத்தை பயங்கரமாக உறுமிக் கொண்டு அப்பாலிருந்த பெண்களின் மீது பாய்ந்தது.

அடுத்த கணத்தில் என்ன நேர்ந்தது என்பதைத் தெளிவாகப் பார்க்க முடியாதபடி ஒரே குழப்பமாகி விட்டது.

சிறுத்தையும் பெண்கள் இருவரும் திடீரென்று மறைந்து விட்டார்கள்.

சில கண நேரம் கழித்து மூவரும் வெவ்வேறு இடத்தில் தண்ணீருக்குள்ளிருந்து வெளியே தலையை நீட்டினார்கள்.

ஏரியின் நீரோடு இரத்தம் கலந்து செக்கச் செவேலென்று ஆயிற்று.

நாற்பத்திநான்காம் அத்தியாயம்

## காதலும் பழியும்

இரு நண்பர்களும் மேற்கூறியவற்றையெல்லாம் திகிலுடன் பார்த்துக் கொண்டுதானிருந்தார்கள். குதிரைகள் மீதிருந்து குதித்தார்கள். தண்ணீர்க் கரையோரம் பாய்ந்து வந்தார்கள்.

இதற்குள் சிறுத்தை தண்ணீரிலே சிறிது தூரம் சென்று விட்டது! அது மிதந்த விதத்தைப் பார்த்தால் அது ஒரு வழியாகப் பிராணனை விட்டு விட்டது என்று தோன்றியது.

பெண்மணிகள் இருவரும் புலியினால் எவ்வளவு காயப்படுத்தப்பட்டார்கள் என்பது ஒன்றும் தெரியவில்லை.

இருவரும் தண்ணீரில் குதித்துப் பெண்மணிகளை நோக்கிச் சென்றார்கள்.

முதலில் வந்தியத்தேவன் மணிமேகலையை அணுகிச் சென்றான். ஏனெனில், நந்தினியை நெருங்குவதற்கு அவனுக்கு அச்சமாக இருந்தது.

மணிமேகலைக்குக் காயம் எதுவும் ஏற்படவில்லை. புலி விழுந்த வேகத்தில் அவளும் தண்ணீரில் விழுந்து முழுகியதில் சிறிது மூச்சுத் திணறியதைத் தவிர வேறொன்றும் அவளுக்கு நேரவில்லை.

வந்தியத் தேவன் தன் அருகில் வருவதைப் பார்த்ததும் அவள் எல்லையில்லாத உள்ளக் கிளர்ச்சி அடைந்து கண்களை இறுக மூடிக் கொண்டாள்.

கரிகாலர் வந்தியத் தேவனுடைய கையைப் பிடித்து நிறுத்தி நந்தினியின் பக்கம் அனுப்பிவிட்டுத் தன்னை நோக்கி

வருவதை அவள் அறியவில்லை. இரண்டு கைகளினாலும் கரிகாலர் அவளைத் தூக்கி அணைத்துக் கொண்டு படித் துறைப் படிகளில் ஏறி மேலே போய்ச் சேர்ந்து தரையில் மெதுவாக அவளை வைக்கும் வரையில் கண்ணை விழித்துப் பார்க்க வில்லை. மூக்கில் சுவாசம் வருகிறதா என்று கரிகாலர் விரலை வைத்துப் பார்த்தபோதுதான் கண்களை மெள்ள மெள்ளத் திறந்தாள். திறக்கும்போதே வந்தியத்தேவனிடம் தன் கரை காணாக் காதலைத் தெரிவிக்கும் பொருட்டு, அன்பும் ஆர்வமும் ததும்பிய நோக்குடன் பார்த்தாள். அவளுடைய கண்ணின் முன் தெரிந்தவர் இளவரசர் கரிகாலர் என்று தெரிந்ததும் துள்ளி எழுந்து அப்பால் நகர்ந்து உட்கார்ந்து கொண்டாள்.

அவளுடைய முகத்தில் அச்சமயம் தோன்றிய ஏமாற்றத்தைக் கவனித்த கரிகாலர் கவீர் என்று சிரித்தார்.

''மணிமேகலை! இது என்ன துள்ளல்? என்னைக் கண்டு இவ்வளவு அருவருப்பு ஏன்?'' என்றார்.

''ஐயா! வேற்று மனிதர் கைபட்டால் பெண்களுக்குக்கூச்சமாயிராதா?'' என்றாள் மணிமேகலை.

''பெண்ணே! என்னை வேற்று மனிதனாக்கி விட்டாயா? எனக்கும் உனக்கும் கலியாணம் செய்து வைக்க ஏகப் பிரயத்தனம் நடக்கிறதே?'' என்றார் கரிகாலர்.

'' சுவாமி ! அந்தப் பிரயத்தனம் பலித்த பிறகுதானே சொந்தமாக முடியும்? அதுவரையில் தாங்கள் வேற்று மனிதர்தானே?'' என்றாள் மணிமேகலை.

''ஆனால் அது உனக்கு இஷ்டமா என்பதை நீ சொல்லலாம் அல்லவா?''

கடம்பூர் இளவரசி சற்று யோசித்து விட்டு, ''ஐயா! தாங்கள் சோழகுலத் தோன்றல்; எல்லாம் அறிந்த புத்திமான். சிறு பெண்ணாகிய என்னிடம் இவ்விதம் பேசலாமா? என் தந்தையிடமல்லவா கேட்க வேண்டும்?'' என்றாள்.

''பெண்ணே! உன் தந்தை சம்மதித்தால் நீ சம்மதிப்பாயா?''

''என் தந்தை சம்மதித்தபிறகு அவர் கேட்டால் சொல்லுவேன். தங்களிடம் இதைப் பற்றிப் பேசவே எனக்குக் கூச்சமாயிருக்கிறது. புலி என்னைக் கொல்லாமலும் நான் தண்ணீரில் மூழ்கிப் போகாமலும் என்னைக் காப்பாற்றினீர்கள். அதனால் தங்களிடம் எனக்கு ஏற்பட்டுள்ள நன்றி காரணமாக இத்தனை நேரமும் பொறுமையாக இருக்கிறேன்.......''

கரிகாலர் சிரித்துவிட்டு, ''மணிமேகலை! நீ வெகு கெட்டிக்காரி; மிக அழுத்தமானவள். ஆனாலும் ஏமாந்து போனாய்! அதற்காக என்னை ஏமாற்றப் பார்க்க வேண்டாம்!'' என்றார்.

---

சர்வதேச விமானச் சங்கத்தின் 63-வது மகாநாடு புதுதில்லியில் நடைபெற்றபோது ருஷ்ய, அமெரிக்க விண்வெளி வீரர்கள் கௌரவிக்கப்பட்டனர்.

படம் 1. ராஷ்டிரபதி கிரியின் பேரன் கிரீஷ் கிரிக்கு ஒரே சந்தோஷம், விண்வெளி வீரர்களுக்கான விருந்தில் கலந்து கொள்ளத் தாத்தா தனக்கும் அனுமதி அளித்து விட்டார் என்று !

படம் 2. ருஷ்ய விண்வெளி வீரர்கள் வோலினோவ், குருவோனுவோவ் ஆகியோர் நிலாவில் உலாவிய அமெரிக்கர்கள் ஆர்ம்ஸ்ட்ராங், கோன்ராட் ஆகியோரைச் சந்திக்கின்றனர்.

படம் 3. முதல் அமெரிக்கப் பெண் விமானி ஜாக்குலின் கோச்ரான் ராஷ்டிரபதியின் கரம் குலுக்குகிறார்.







''ஐயா! இது என்ன வார்த்தை! தங்களை இந்த அறியாப் பெண் ஏமாற்றுவதா? எதற்காக? எந்த முறையில்?''

''வீணாக ஏன் சுற்றி வளைத்துப் பேசுகிறாய்? எனக்குப் பதிலாக வந்தியத்தேவன் உன்னைத் தூக்கிக் கொண்டு வந்து கரை சேர்த்திருந்தால் இவ்வளவு கடூரமாகப் பேசுவாயா? வந்தியத்தேவன் என்று நினைத்துத்தானே நீ கண்ணை மூடிக் கொண்டாய்? அதே எண்ணத்துடனேதான் கண்ணைத் திறந்தும் பார்த்தாய்! பாவம்! ஏமாந்து போனாய்!'' என்றார் கரிகாலர்.

மணிமேகலை வெட்கத்துடனே சிறிது பீதியும் அடைந்தாள். பின்னர் தைரியப்படுத்திக் கொண்டு, ''அரசே! தங்களுக்குத்தான் என் மனசு தெரிந்திருக்கிறதே! அப்படியிருக்கும்போது, இந்தப் பேதைப் பெண்ணை எதற்காகச் சோதிக்கிறீர்கள்?'' என்றாள்.

''மணிமேகலே! உன் மனசு எனக்குத் தெரிந்திருக்கிறது. அதுபோலவே வல்லவரையனுடைய மனமும் எனக்குத் தெரிந்திருக்கிறது. உன்னுடைய பரிசுத்தமான அன்புக்கு அவன் பாத்திரன் அல்லவே என்றுதான் யோசிக்கிறேன். அதோ பார்! இளையராணி நந்தினியும் வந்தியத்தேவனும் சல்லாபம் செய்வதை! நந்தினியின் முகத்தில் குடிகொண்டிருக்கும் குதூகலத்தைப் பார்!'' என்றார்.

மணிமேகலை அவர் காட்டிய திசையைப் பார்த்தாள். அந்தக் கணத்தில் அசூயை என்னும் விஷம் அவளுடைய பால் போன்ற நெஞ்சில் ஏறிவிட்டது.

* * *

அதே சமயத்தில் வந்தியத்தேவனும் நந்தினியும் பேசிக்கொண்டிருந்தார்கள். நந்தினியின் தோள் ஒன்றில் புலி நகம் பட்டு இரத்தம் கசிந்துகொண்டிருந்தது.

மணிமேகலையைப் போல் நந்தினி கண்ணை மூடிக் கொள்ளவும் இல்லை. வந்தியத்தேவன் கைகளிலிருந்து விடுவித்துக் கொள்ள அவசரப்படவும் இல்லை. வந்தியத்தேவனே, தன் கையைச் சுட்டுக் கொண்டிருந்த நெருப்புத் தணலைக் கீழே போடுவது போல் அவசரமாக இளைய ராணியைக் கரையில் இறக்கிவிட்டான். தண்ணீரில் முழுகி இருந்த போதிலும் நந்தினியின் உடம்பு உண்மையிலேயே சுட்டுக் கொண்டிருந்தது.

வந்தியத்தேவன் உள்ளத்தில் இனந்தெரியாத பீதி குடிகொண்டது. அவன் உடம்பு பதறியது.

நந்தினி புன்னகையுடன், ''ஐயா! ஏன் இவ்வளவு பதற்றம்? என்னைப் புலி என்று நினைத்துக் கொண்டீரா? அல்லது புலியைக் காக்க நினைத்துத் தவறாக என்னைக் கரை சேர்த்துவிட்டதற்காக வருத்தப்படுகிறீரா?'' என்றாள்.

''அம்மணி! இவ்வளவு கொடூரமான வார்த்தைகளைச் சொல்ல வேண்டாம். தங்களைத் தொட்டு எடுத்து வரும்படி நேர்ந்து விட்டதை நினைத்து நெஞ்சு சிறிது கலக்கம் அடைந்தது....''

''குற்றம் உள்ள நெஞ்சு அல்லவா? அதனால் கலங்குகிறது!''

''தேவி! நான் ஒரு குற்றமும் செய்யவில்லையே!''

''குற்றம் செய்யவில்லையா? தஞ்சைக் கோட்டைக்குள் பிரவேசிப்பதற்கு என் உதவியை நாடினீர். முத்திரை மோதிரத்தைக் கொடுத்து உதவினேன். பிறகு என் அந்தப்புரத்தில் திருட்டுத்தனமாகப் பிரவேசித்தீர். அப்போதும் உமக்குத் தீங்கு நேராமல் காப்பாற்றினேன். அதற்குக் கைம்மாறு என்ன செய்தீர்? எனக்குத் தெரியாமல், என்னிடம் சொல்லிக் கொள்ளாமல், திருடனைப் போல் தப்பி ஓடிப் போனீர். பழையாறை இளையபிராட்டியைச் சந்தித்த பிறகு என்னிடம் திரும்பி வருவதாகச் சொன்னீர். அந்த வாக்குறுதியை நிறைவேற்றவில்லை. இவையெல்லாம் குற்றமல்லவா?''

''அந்தக் குற்றங்களை ஒப்புக் கொள்கிறேன். ஆனால் அவை ஒவ்வொன்றுக்கும் காரணம் இருக்கிறது. நான் பிறரிடம் சேவகம் செய்பவன். ஆதித்த கரிகாலருடைய கட்டளைக்குக் கட்டுப்பட்டவன். அதைத் தாங்கள் எண்ணிப் பார்த்தால் என் பேரில் குற்றம் சாட்ட மாட்டீர்கள்.....''

''ஆமாம்; புலியின் வாயிலிருந்து ஒரு பெண்ணைக் காப்பாற்ற வேண்டுமென்றால்கூடக் கரிகாலரின் கட்டளை உமக்கு வேண்டும். தண்ணீரில் முழுகும் பெண்ணைக் கரை சேர்ப்பதற்கும் அவருடைய அநுமதி வேண்டும். நான் கவனித்துக் கொண்டுதானிருந்தேன்! அடடா! மணிமேகலையைக் காப்பாற்றுவதில் இளவரசர் எத்தனை பரபரப்புக் காட்டினார்? நான் நீரில் முழுகிச் செத்துப் போயிருந்தால் சந்தோஷப்பட்டிருப்பார். அவருடைய மனத்தை அறியாமல் நீர் என்னைக் கரை சேர்த்து விட்டீர்.....''

''அம்மணி! அவ்வாறு சொல்ல வேண்டாம்! தாங்கள் ஓலை அனுப்பியபடியால்தான் கரிகாலர் காஞ்சியிலிருந்து இவ்வளவு தூரம் வந்திருக்கிறார்......''

''ஆனால் அவர் இங்கு வராமல் தடை செய்வதற்காக நீர் அவசர அவசரமாக ஓடி வந்தீர். இளையபிராட்டியின் செய்தி

யுடன் வந்தீர். ஆனால் உம்முடைய முயற்சி பலிக்கவில்லை. என்னுடைய காரியத்தில் நீர் தலையிடுவதற்குச் செய்யும் முயற்சியெல்லாம் இவ்வாறுதான் தோற்றுப் போகும்!''

நந்தினியின் இந்த வார்த்தைகள் வந்தியத்தேவனின் மனக் குழப்பத்தை அதிகமாக்கின.

நந்தினி தொடர்ந்தாள்: ''உம்முடைய குற்றத்தை உம்முடைய முகத் தோற்றமே ஒப்புக் கொள்கிறது. அமாவாசை இராத்திரி பள்ளிப்படைக்கு அருகில் நீர் என் வசம் அகப்பட்டீர். என் ஆட்களிடம் ஒரு சமிக்ஞை செய்திருந்தால் போதும். உம்மைக் கொன்றிருப்பார்கள். அப்போதும் உம் உயிரைக் காப்பாற்றி அனுப்பினேன். அதற்குக் கூட உமக்கு நன்றி இல்லை. உம்மைப் போல் நன்றி கெட்ட மனிதரை இந்த உலகத்தில் நான் பார்த்ததே இல்லை...''

''தேவி! என் மனத்தில் தங்களிடம் பரிபூரண நன்றி குடிகொண்டிருக்கிறது. சத்தியமாகச் சொல்கிறேன்.''

''ஆனால் இந்த ஊருக்கு நாம் வந்து இத்தனை நாளாகியும் உமது நன்றியைத் தெரிவிப்பதற்கு நீர் ஒரு முயற்சியும் செய்யவில்லையே? உமது வார்த்தையை நான் எப்படி நம்புவது?''

''தங்களைத் தனியாகச் சந்திக்கும் போது தெரிவித்துக் கொள்ளலாம் என்றிருந்தேன். அதற்குரிய சந்தர்ப்பம் கிடைக்கவில்லை.....''

''சந்தர்ப்பம் ஏற்படுத்திக் கொள்ள நீர் ஒருவித முயற்சியும் செய்யவில்லை. முகத் தோற்றத்தினால், கண் பார்வையினால் ஒரு குறிப்புக்கூட வெளியிடவில்லை. ஏன்? இத்தனை நாட்களாக என் பக்கம் நீர் ஒரு தடவையாவது திரும்பிப் பார்க்கவில்லை........''

''தேவி! தாங்கள் சோழ நாட்டுத் தனாதிகாரியின் தர்மபத்தினி......''

''அதாவது கிழவனைக் கலியாணம் செய்து கொண்டவள் என்று என்னைப் பரிகசிக்கிறீர்; இல்லையா?''

''ஐயோ! தங்களை நான் பரிகசித்தால் கொடிய நரகத்துக்குப் போவேன்....''

''வேண்டாம், வேண்டாம்! எது எப்படியிருந்தாலும் சரி, பழுவேட்டரையரின் 'தர்ம பத்தினி' என்று என்னைக் குறிப்பிட வேண்டாம். நான் அவருடைய மனைவியே அல்ல....''

''ஐயோ! இது என்ன சொல்லுகிறீர்கள்?''

''உண்மையைத்தான் சொல்கிறேன். பலவந்தமாக ஒரு பெண்ணைப் பிடித்துக் கொண்டு வந்து வைத்திருந்தால், அவள் மனைவி ஆகிவிடுவாளா?''

''தேவி! தாங்கள் தமிழ் நாட்டுப் பெண் குலத்தில் வந்தவர். பெண் குலத்தின் தர்மத்துக்கு மாறாகத் தாங்கள் எதுவும் செய்ய மாட்டீர்கள்!''

''பெண் குலத்தின் தர்மத்தை நான் அறிந்துதானிருக்கிறேன். பழந் தமிழ் நாட்டுப் பெண்கள் மனத்தினால் யாரைக் காதலித்தார்களோ, அவரையே கணவனாகக் கொண்டார்கள். பலவந்த மணத்துக்கு அவர்கள் உடன்படுவதில்லை!''

''ஆனால் தாங்கள்....?''

''நீர் சொல்லப் போவது எனக்குத் தெரியும். பழுவேட்டரையருடைய பலவந்த மணத்துக்கு நான் எப்படி உடன்பட்டேன் என்று கேட்கிறீர். ஒரு முக்கிய நோக்கத்துக்காகவே உடன்பட்டேன். பழந் தமிழ் நாட்டுப் பெண்களுக்கு மற்றொரு சிறப்பியல்பும் உண்டு. அவர்கள் தங்களுக்கு இழைக்கப்பட்ட அநீதிக்குப் பழிக்குப் பழி வாங்கியே தீர்வார்கள். ஐயா! நீர் எனது காதல் நிறைவேறுவதற்குத்தான் உதவி செய்யவில்லை; என் விரோதிகள் மீது பழி வாங்குவதற்காவது உதவி செய்வீரா?''

கடைசியாக நந்தினி கூறிய மொழிகள் வந்தியத்தேவனைத் திணறித் திண்டாடச் செய்தன.

''தேவி! தேவி! இது என்ன....? காதலாவது? பழியாவது? எனக்கும் தங்கள் காதலுக்கும் என்ன சம்பந்தம்? காதலுக்கும் பழி வாங்குவதற்கும் என்ன சம்பந்தம்?....''

''சம்பந்தம் உண்டு. ஆனால் அதைப் பற்றிச் சொல்வதற்கு இப்போது நேரம் இல்லை. அதோ இளவரசரும் மணிமேகலையும் நெருங்கி வந்து கொண்டிருக்கிறார்கள். நாளை நள்ளிரவு நேரத்தில் நான் இருக்கும் அறைக்குத் தனியாக வந்தால் சொல்லுகிறேன்.....''

''அது எப்படிச் சாத்தியம், தேவி! தாங்கள் அந்தப்புரத்தில் இருக்கிறீர்கள். நான் எப்படி அங்கே இரவில் தனியாக வர முடியும்?''

''அதே அந்தப்புர அறையிலிருந்து ஒரு நாள் நீர் யாரும் அறியாமல் தப்பித்துக் கொண்டு செல்லவில்லையா? போன வழியாகவே அங்கே திரும்பி வரலாம் அல்லவா? உமக்கு மனம் மட்டும் இருந்தால்....''

வந்தியத்தேவனுடைய திகைப்பு இப்போது பரிபூரணமாகி விட்டது.

ஆனால் நந்தினியின் முகத்தில் எவ்வித மாறுதலும் இல்லை. எப்போதும்போலப் புன்னகை தவழ்ந்தது. (தொடரும்)

# க்ளாக்ஸோ மில்க் ஃபுட் குழந்தைகளை ஆரோக்கியமாக வளர்க்கிறது




## உங்கள் செல்வமும் ஒரு க்ளாக்ஸோ குழந்தை தானே?

குழந்தையின் ஆரம்ப வாழ்வை ஆரோக்கியமாகத் துவக்குகிறது க்ளாக்ஸோ மில்க் ஃபுட்; காரணம், குழந்தைக்கு ஊட்டமளிப்பதற்கான எல்லாச் சத்துக்களையும் கொண்டது க்ளாக்ஸோ மில்க் ஃபுட்... அவனது எலும்புகளை உறுதியாக்கி, தசைகளையும் இரத்தத்தையும் வளர்க்கிறது அது. இந்தியாவில் முதன் முதலாகக்குழந்தைகளுக்கான பாலுணவைத் தயாரித்தவர்கள் அளிப்பது—க்ளாக்ஸோ மில்க் ஃபுட்

# இல்லங்களில் வளர் செல்லங்கள்



ஏஷியாடிக் ஆடோமொபைல் நிறுவனத்தின் உரிமையாளர் திரு எஸ். எம். ஏ. வித்திக் எழும்பூரிலுள்ள தமது இல்லத்தில் ஆறு ஜோடி ஆட்டப் புறாக்களை வளர்த்து வருகிறார். இவற்றில் சில தூய வெண்மை; சில கறுப்பு வண்ணமுள்ளவை. ஆட்டப் புறா என்று இந்த இனத்துக்கு ஏன் பெயர்?

மயிலுக்கு உள்ளது போன்று இந்தப் புறாக்களின் வால் புறத்தில் சிறு தோகை உள்ளது. தோகையை உயர்த்தி விரித்து இவை ஆடும். மற்றப் புறா வகைகளைவிட இவை உருவத்தில் சற்றே பெரியவை. தோகை விரிக்கும்போது, பிரித்து மடக்கும் சிறிய ஜப்பான் கைவிசிறி போலக் காட்சி அளிக்கிறது. மற்றப் புறாக்களைவிட ஆட்டப் புறாவின் விலையும் கூடுதல்.

''மூன்று ஆண்டுகளுக்கு முன்பு மூர்மார்க்கெட்டிலிருந்து பதினாறு ரூபாய்க்கு ஒரு ஜோடி ஆட்டப் புறா வாங்கி வந்தேன். அந்த ஒரு ஜோடிதான் மூன்று வருடங்களில் ஆறு ஜோடியாகப் பெருகியுள்ளது. என் பெண்கள் ஷபனிலா (11), ஷகிலா (9) இருவருக்கும் பொழுதுபோக்காக இருக்கட்டும் என்பதற்காகவே வாங்கினேன். தொழில் முறையில் புறா வளர்ப்பதும் மிக லாபகரமாயிருக்கும் என்பதை அனுபவத்தில் கண்டேன்'' என்கிறார் ராமநாதபுரம் மாவட்டத்தில் ஒரு விவசாயக் குடும்பத்தில் பிறந்த திரு வித்திக்.

''ஒரு தடவை முட்டையிட்டால், அடுத்த தடவை மீண்டும் முட்டையிட எவ்வளவு காலம் பிடிக்கும்?''

''சுமார் நாற்பது நாட்களுக்கொரு முறை முட்டையிடும். ஒரு தடவைக்கு இரண்டு முட்டைகள் இடும். அடுத்த அடுத்த நாட்களில் நாளுக்கு ஒன்று வீதம் முட்டை வெளிப்படும். முதல் நாள் இட்ட முட்டையிலிருந்து ஆணும், அடுத்த நாள் இட்ட முட்டையிலிருந்து பெண்ணுமாகக் குஞ்சு பொரிக்கும். அடுத்த அடுத்த நாட்களில் முட்டையிட்டாலும், சரியாக இருபத்து மூன்றாவது நாள் — அதாவது ஒரே நாளில் ஒவ்வொரு முட்டையிலிருந்தும் ஆணும் பெண்ணுமாகக் குஞ்சுகள் வெளிப்படும். இந்த நியதி மாறுவதேயில்லை! இன்னொரு முக்கியமான விஷயம் என்னவென்றால், புறா முட்டை இட்டதும் அந்த முட்டையை நாம் கையில் எடுத்துப் பார்த்து விட்டுத் திருப்பி வைத்தால் அந்த முட்டையைப் புறா அடை காப்பதேயில்லை!'' என்கிறார் திரு வித்திக்.

''முட்டையிலிருந்து வெளிப்பட்ட குஞ்சு நன்கு முழு அளவுக்கு வளர எவ்வளவு காலம் பிடிக்கும்?''

''மூன்று வாரங்களில் முழு வளர்ச்சி அடையும்.''

''இவற்றுக்கு உணவு?''

''பச்சைப் பயிறு, குப்பை அரிசி ஆகிய தானியங்களும், கீரை, முட்டைக்கோஸ் முதலியனவும் நல்ல உணவு. புறா சுத்த சைவம்!''

''குப்பை அரிசி என்கிறீர்களே — அது என்ன?''

''கொத்தவால் சாவடிக் கடைகளில் அன்றாட விற்பனை முடிந்ததும் கீழே சிதறிக் கிடக்கும் தானியங்களையெல்லாம் கூட்டிப் பெருக்கிச் சேகரித்து விற்கின்றனர். கிலோ 75 பைசா வீதம் இந்தத் தானியக் கலவை கிடைக்கும். இதைத்தான் குப்பை அரிசி என்கிறார்கள்.''




''எப்போதும் கூண்டிலேயே தான் அடைத்து வைத்திருப்பீர்களா?'' என்று வித்திக்கைக் கேட்டேன்.

''இறந்து விடுவோம். இதோ — தோட்டத்தில் காய்கறிகள் பயிரிட்டிருக்கிறேன். விதை முளைத்து, முளை வெளிப்பட்டதும் அந்தத் தளிர்களை இவை கொத்தித் தின்று விடுகின்றன. பயிர்கள் பாழாகி விடும். செடி பெரிதாக வளர்ந்து விட்டால் அப்புறம் பயமில்லை. விதைகள் முளைவிடும் சமயத்தில் கூண்டுக்குள் அடைத்து வைக்க வேண்டியது அவசியமாகிறது.''

''இவை அதிக உயரம் பறக்குமா? புறாக்கள் தொலைதூரம் பறந்து செல்லுவது வழக்கம் என்று கூறுவார்களே? புறாக்களைப் பறக்கவிட்டுப் பந்தயம்கூட நடத்துவதுண்டே?'' என்று கேட்டதற்கு, ''பந்தயத்துக்குப் பழக்கும் புறாக்கள் வேறு இனம். அவை நூற்றுக்கணக்கான மைல்கள் பறந்து சென்று மீண்டும் நம் வீட்டுக்கே திரும்பி விடும். இந்த ஆட்டப் புறாக்கள் பந்தயத்துக்கு உகந்தவை அன்று. ஆனால், புதிய புறா ஏதாகிலும் வழி தவறி இந்தப் பக்கம் வந்தால், நம் புறாவை அனுப்பினால் அது புதிய புறாவை அழைத்துக் கொண்டு வந்து விடும்'' என்கிறார் திரு வித்திக்.

பாரிசவாயு நோயுள்ளவர்களுக்குப் புறாவின் காற்றுப் பட்டால் நல்ல குணம் ஏற்படும் என்று சிலர் நம்புகிறார்கள். புறாவின் கழிவுப் பொருள் பயிர்களுக்கு மிக நல்ல உரமாகும்.

பேட்டி: **பாணன்**

# ராமாயணம்

## —ராஜாஜி—



## 71. சண்டைக்கு இழுக்கிறான்

சீதையிடம் விடைபெற்றுக் கொண்டு போன ஹனுமான் வடக்கே சென்று மதில் மேல் உட்கார்ந்து யோசித்தான்.

''சீதைக்குத் தைரியம் ஊட்டவும், ராவணனுக்கும் அவன் அரக்கர் கூட்டத்துக்கும் சரியான பயம் உண்டாக்கி, அவளை எந்த விதத்திலும் துன்பப் படுத்தாமல் இருக்கும்படி செய்யவும் என்ன செய்யலாம்? சும்மா நான் திரும்பி விட்டால் ராவணனுக்கு நான் வந்ததுகூடத் தெரியாது. அவன்பாட்டுக்கு முன்போல் கர்வம் கொண்டவனாகவே இருப்பான். நான் ராமனுக்குச் செய்தியைச் சொல்லிச் சேனையுடன் லங்கைக்குத் திரும்பி வரும் வரையில் சீதை க்ஷேமமாக இருக்க வேண்டுமல்லவா? சீதையை ராவணன் துன்புறுத்தாமல் இருப்பதற்காக அவன் உள்ளத்தில் போதிய பயத்தை உண்டாக்க வேண்டும். அதைச் செய்து விட்டுத்தான் நான் திரும்ப வேண்டும். அரக்கர்களைச் சமாதான முறையில் நல்வழியில் நிற்கச் செய்ய முடியாது. இந்த மூர்க்கனிடம் அளவற்ற செல்வம் இருக்கிறது. இவர்களுள் பேதம் உண்டாக்குவதும் ஆகாத காரியம். சாம தான பேதம் இவை பயனில்லை. மேல் நடக்க வேண்டிய காரியம் கெட்டுப் போகாத அளவில் இவர்கள் உள்ளத்தில் போதிய பயத்தை உண்டாக்கிவிட்டு நான் போக வேண்டும். அப்படிச் செய்தால் சீதையின் க்ஷேமம் காக்கப்படும். இந்தக் காரியத்தையும் முடித்துவிட்டு, வேகமாகத் திரும்புவேன்'' என்று நிச்சயித்தான்.

உடனே பெரிய வடிவம் கொண்டு அந்த அழகிய அந்தப்புரப் பூந்தோட்டத்தை நாசம் செய்ய ஆரம்பித்தான். மரங்களைப் படபடவென்று வீழ்த்தித் தள்ளி, கொடிப் பந்தல்களை நாசம் செய்து, வாவிகளையும் செய்குன்றுகளையும் அலங்காரங்களையும் எல்லாவற்றையும் கெடுத்துப் பாழாக்கினான். மிக அழகுடன் விளங்கிய அசோக வனம் தன் அழகை முற்றிலும் இழந்தது. அங்கிருந்த மான்களும் பறவைகளும் பயந்து கூவிக் கொண்டு வெளியேறி விட்டன. ராக்ஷசிகள் தூங்கிக் கொண்டிருந்தவர்கள் எழுந்து இதென்னவென்று காரணம் தெரியாமல் திகைத்தார்கள்.

ஹனுமான் நந்தவனத்தை அழித்து விட்டு மதில் சுவரின் மேல் ஏறி உட்கார்ந்தான். ராக்ஷசிகள் வானரத்தைப் பார்த்தார்கள். ஹனுமான் வர வரத் தன் உடலைப் பெருக்கிக் கொண்டு பயங்கரமாக வளர்ந்து அவர்கள் இதயம் நடுங்கச் செய்தான். ராவணனிடம் சொல்லச் சிலர் ஓடினார்கள். சிலர் சீதையிடம் போய், ''இந்தப் பெருங் குரங்கு எப்படி வந்தது? இது உனக்குத் தெரிந்தேயிருக்க வேண்டும். உன்னிடம் இது ஏதாவது பேசிற்றா? உள்ளபடி சொல், பயப்படாதே!'' என்றார்கள்.

சீதை, ''இந்த அரக்கர் உலகத்தில் எதுவெல்லாம் நடக்குமோ? எனக்கு என்ன தெரியும்? மாயம் கற்ற ராக்ஷசர்களைப் பற்றி நான் ஒன்றும் அறியேன். இந்த வானரம் உங்களில் ஒருவனாகத்தான் இருக்க வேண்டும். அவனைப் பற்றி உங்களுக்குத்தான் தெரியலாம்''



என்று சொல்லிச் சமாளித்துக் கொண்டாள்.

"ஐயோ, சீதை பொய் சொல்லிவிட்டாளே! இதற்கு என்ன சமாதானம்?" என்று சில பண்டிதர்கள் தர்க்கம் செய்து கொண்டிருந்தது வாசகர்களுக்கு இந்தச் சந்தர்ப்பத்தில் ஞாபகம் வரலாம்.

இந்த விவாதத்தைப் போன்ற ஒரு பயனற்ற விவாதத்தை நான் கண்டதில்லை. "ராம காரியம் உடனே அழிந்து போக வேண்டும் என்று ஆசைப்படுகிறீர்களா? ராமாயணத்தையெல்லாம் வேறுவிதமாக நீங்கள் நடத்தப் போகிறீர்களா ? இந்தக் கேள்விகளையெல்லாம் நிறுத்துங்கள்" என்று இந்தப் பண்டித சிகாமணிகளுக்குச் சொல்லுவேன்.

"சீதை செய்த மற்றக் காரியங்களைச் செய்யத் துணிந்து செய்வீர்களானால், சிறைப்பட்டுக் கிடந்து, துக்கத்தில் கரை காணமல் ஏங்கி நின்றீர்களானால், இத்தகைய 'பொய்யை' உங்களைக் கேட்கும் அரக்கர்களிடம் நீங்களும் சொல்லலாம். அதனால் உங்கள் வாய்மை பங்கம் அடையாது" என்று சொல்லுவேன்.

யாம்மெய்யாக் கண்டவற்றுள்
இல்லை எனைத்தொன்றும்
வாய்மையின் நல்ல பிற

வாய்மை எனப்படுவது யாதெனின்,
யாதொன்றும்
தீமை இலாத சொலல்.

பொய்ம்மையும் வாய்மை யிடத்த,
புரைதீர்ந்த
நன்மை பயக்கும் எனின்

என்றார் பொய்யாமொழிப் புலவர்.

அசோக வனத்திலிருந்து பயந்து ஓடிய ராக்ஷஸிகள் ராவணனிடம் நடந்ததைத் தெரிவித்தார்கள்.

"மன்னனே! ஒரு பயங்கர வடிவம் கொண்ட குரங்கு அசோக வனத்தில் வந்து உங்கள் அரண்மனைப் பெண்களுடைய நந்தவனத்தையெல்லாம் பாழாக்கிக் கொண்டிருக்கிறது. அந்தக் குரங்கைப் பார்த்தால் எங்களுக்குப் பயமாக இருக்கிறது. சீதையிடம் அது ஏதோ ரகசியமாகப் பேசிற்று."

இவ்வாறு ராக்ஷஸிகள் சொன்னார்கள். ஆனால் தாங்கள் தூங்கிப் போனதை ராக்ஷசேசுவரனிடம் சொல்லவில்லை.

" நாங்கள் சீதையை எவ்வளவோ கேட்டுப் பார்த்தோம். 'இது யார்? இந்த வானரன் ஏன் இங்கே வந்தான்? உன்னிடம் என்ன பேசினன்?' என்று பலவாறாகக் கேட்டோம். அவள் ஒன்றும் சொல்ல மாட்டேன் என்கிறாள். நீங்கள் இந்தக் குரங்கைப் பிடித்து ஒழித்துவிட வேண்டும். தகுந்த ஆட்களை அனுப்புவீர்களாக. மகா பயங்கரமான குரங்கு. அதைப் பிடிக்கும் வல்லமை கொண்ட வீரர்களை உடனே அனுப்புவீர்களாக. இந்தக் குரங்கு அழகிய வனம் முழுவதையும் ஒரே பாழாகச் செய்து விட்டது. ஆனால் இந்தச் சீதையிருக்கும் சிம்சுபா விருட்சத்தை மட்டிலும் தொடவில்லை. வளர்ந்து படர்ந்திருக்கும் அந்த மரம் கொஞ்சமும் சேதப்படவில்லை. இதற்குக் காரணம் இருக்க வேண்டும். மற்ற மரங்களையும் கொடிகளையும், குளங்கள் பந்தல் எல்லாவற்றையும் பாழாக்கிய இந்த வானரம் சீதை யிருக்கும் இடத்தை மட்டும் விடுவானேன் ? இதில் மோசம் இருக்கிறது. இது சாதாரணக் காட்டு மிருகமல்ல. உங்கள் பகைவர்களான தேவேந்திரனே குபேரனே அனுப்பிய வானரமாகத்தான் இருக்க வேண்டும். அல்லது அந்த ராமனுடைய வேலையாக இருக்க வேண்டும். சீதையோடு பேச இந்த வானரத்துக்கு எப்படித் தைரியம் வந்தது? இவன் ராமனுடைய தூதனாகவே இருக்க வேண்டும். உடனே வீரர்களை அனுப்பி இந்தப் பயங்கர வானரத்தைப் பிடிக்கச் செய்வீர்களாக" என்றார்கள்.

தன் மனைவிகளுக்காக நிருமாணித்திருந்த மிக சௌந்தர்யமான பூந்தோட்டம் அழிந்து போன செய்தியைக் கேட்ட ராவணன் மிகுந்த கோபங் கொண்டான். இரண்டு கண்களும் இரண்டு தீவட்டிகளைப் போல் சிவந்து அவற்றிலிருந்து சுடச் சுட எண்ணெய்த் துளிகள் கொட்டுவது போல் கண்ணீர் வடிந்தது.

உடனே தனக்குப் பக்கத்தில், 'உத்தரவென்ன?' என்று எப்போதும் மிகக் கவனமாக இருந்து கொண்டு வந்த வீரர்களை அனுப்பினன். கதாயுதங்களும் இரும்பு உலக்கைகளும் கத்திகளும் சூலங்களும் எடுத்துக்கொண்டு அவர்கள் போனார்கள். (தொடரும்)

---

ஜம்போ ஓ ஓ!

1903ல் ஆர்வில் ரைட் தமது விமானத்தில் முதன் முதலில் எத்தனை தூரம் பறந்தாரோ (120 அடி), அதைவிட அதிக நீளமானது புதிய போயிங் 747 ஜம்போ விமானம் (231 அடி)!

- கரண்ட் - முத்து

# இருமலே, போ!



அவள் சற்று முன்புதான் இருமலால் திணறிக் கொண்டிருந்தாள்… பிறகு க்ளைகோடின் சாப்பிட்டாள். இப்பொழுது அவளைப் பாருங்கள்! சோர்வைத்தரும் இருமலிலிருந்து விடுபட்டு எவ்வளவு நிம்மதியாகத் தூங்குகிறாள்!

**பூரண இருமல் கட்டுப்பாட்டுக்கு க்ளைகோடினுக்கு இணை எதுவுமில்லை!**

இருமலிலிருந்து பூரணமாக நிவாரணம் தர மருத்துவரீதியாக அங்கீகரிக்கப்பட்ட க்ளைகோடின் ஃபார்முலா செயல்புரிவது இப்படித்தான்:



- **மூளையில்** — இருமல் கேந்திரத்தைக் கட்டுப்படுத்துகிறது.
- **தொண்டையில்** — சளி அடைப்பை அகற்றி எரிச்சலைச் சமனப்படுத்துகிறது.
- **மார்பில்** — இறுகிய தசைநார்களுக்கு இதமளித்து சுலபமாக சுவாசிக்க உதவுகிறது.
- **நுரையீரல்களில்** — அடைத்துக் கொண்டிருக்கும் கோழையைத் தளர்த்தி சளியை வெளியேற்றுகிறது.




## க்ளைகோடின்

**டெர்ப் வசாகா**

இருமல்களுக்கு, மிக அதிகமாக விற்பனையாகும் நம்பகமான வீட்டு நிவாரணி

everest/599-i/ACW tm



# ரகுபதி ராகவ

## மகாத்மா காந்தி



தமிழாக்கம்: ராஜாஜி..

54

நான் சொன்னதிலிருந்து என்ன ஏற்படுகிறதென்றால் பக்தியும் ஞான நிலையும் ஒன்றே. பக்தி வேறு, ஞானம் வேறு அல்ல.

பக்தியே விடுதலை அல்லது முக்தி. ஞானமே முக்தி. ஞானம் அல்லது பக்தி இவற்றைக் கொண்டு வேறொன்றை அதாவது முக்தியை அடைவோம் என்று எண்ணலாகாது. ஒரு ரூபாயை எடுத்துக் கொண்டு கடைக்குச் சென்றால் தின்பண்டமோ அல்லது விஷமோ விலைக்கு வாங்கலாம். முத்திரையிட்ட பணத்துக்கு மதிப்பு அதைக் கொண்டு வேறு பொருளைப் பெறுவதுதான். அதற்கே தனிப் பயன் இல்லை. பக்தியும் ஞானமும் அம்மாதிரியல்ல. பண்ட மாற்றலுக்கு அல்ல, பக்தியும் ஞானமும் பெறுவது. வேறொன்றையும் அவற்றைக் கொண்டு பெறுமலேயே, அவற்றினின்றே ஆனந்தம் பெறுகிறோம். ஞானமும் பக்தியும் சாதனங்கள் அல்ல. அடைய வேண்டிய பயனும் அதற்கு வேண்டிய சாதனமும் ஒன்றாகவே தீர்ந்து போகின்றன. சாதனமே பயனாகிறது. பூரண சாந்தியே நிர்வாண நிலைக்கு வழி. அதுவே நிர்வாணமும்.* பக்தியும் ஞானமும் உண்மையான பக்தியும் ஞானமும் ஆக வேண்டுமானால் எந்தப் பயனையும் கருதாத காரியமாக இருக்க வேண்டும்.

எது நல்லது எது தீயது என்று ஒருவன் அறிந்து கொண்டால் அந்த அறிவே ஞானமாகி விடாது. அந்தப் புலமையினாலேயே முக்தியடைய முடியாது. புலமை அடைந்தவன் அந்தப் புலமையினாலேயே ஞானியாகி விட மாட்டான்.

படிப்பு ஏற ஏறச் சோம்பேறித்தனமும் ஏறுகிறது. தன் கையினால் எந்த வேலையும் செய்யத் தகாதவனாகிவிடுகிறான். 'நான் சாஸ்திரம் படித்திருக்கிறேன். இந்தச் சின்னக் காரியங்களையெல்லாம் நான் செய்ய வேண்டுமா?' என்று எண்ணுகிறான்.

பக்தியும் சோம்பேறித்தனத்தில் முடிந்து விடுகிறது. ஜெபமாலை கையில் வைத்து எண்ணிக் கொண்டு, கண்களில் நீர் மல்க, யாருக்கும் எந்தவிதமான பணியும் செய்வதற்கு அவகாசமில்லாமல் ஜெபம் நடத்துகிறார்கள். இது என்ன பயன் தரும்? உண்பதிலும் தூங்குவதிலும் செலவழிக்கும் காலம் தவிர எஞ்சிய போதெல்லாம் ஜெப மாலையை விடாமற் பக்தி செலுத்தி நெல் குத்தவோ, மா அரைக்கவோ, நோயாளியைப் பார்க்கவோ சமயம் இல்லாமல் பக்தி நடைபெற்று வருகிறது. இந்த விதமான பக்தியில் பயனில்லை. கீதையில் சொல்லப்படுவது என்னவென்றால் பணிகளைச் செய்தே முக்தி பெறலாம். ஜனகன் முதலிய பெரியோர்களும் கடமைகளைச் செய்தே வீடு பெற்றார்கள். ''நானும்கூடச் செய்யாமை பூண்டு விட்டேனானால் உலகம் அழிந்து போகும். மக்களைப் பற்றிச் சொல்ல வேண்டுமா? செய்ய வேண்டிய தொழிலைச் செய்ய வேண்டிய முறையில் செய்து கொண்டு போனால் தான் வீடு பெற முடியும்.'' — இது கீதாசாரியன் வாக்கு.

எந்தச் செயலும் நம்மைப் பந்தப் படுத்துகிறது என்பது உண்மை. ஆயினும் உயிர் கொண்ட மக்கள் செயலின்றியிருக்க முடியாது. விரும்பியும் விரும்பாமலும் செயல்களில் சிக்கியே தீர வேண்டும். 'செயல்' என்றால் எண்ணும் எண்ணங்களும் அதனுள் அடங்கும். செயல்களினால் கர்ம பந்தத்தில் சிக்கிக் கொள்ளாமல் இருக்க நாம் என்ன செய்ய வேண்டும்? இதைத்தான் கீதை நான் கண்ட வேறு எந்த சாஸ்திரத்திலும் சொல்லாத முறையில் நன்றாக விளக்கியிருக்கிறது.

---

* திருவாய்மொழிப் பாசுரங்களிலும் நம்மாழ்வார் இதையே சொல்லுகிறார்.

இன்பத் துன்பங்கள் செற்றுக் களைந்து பசை அற்றால்
அன்றே அப்போதே வீடு; அதுவே வீடு வீடாமே!
அதுவே வீடு: வீடு பெற்று இன்பம் தானும்
அது: தேறி.
எதுவே தானும் பற்று இன்றி யாதும் இலிகள்
ஆகிற்கில்
அதுவே வீடு; வீடு பேற்று இன்பம் தானும்
அது: தேறுது
எதுவே வீடு? ஏது இன்பம்? என்று எய்த்தார் -
எய்த்தார், எய்த்தாரே.

## அத்தியாயம் 19

வெகுநேரம் வரையில் யாமினிக்குத் தூக்கமே வரவில்லை. படுக்கையில் புரண்டு புரண்டு படுத்துப் பார்த்தாள். விளக்கின் வெளிச்சம் கண்ணைக் கூசியது. கட்டிலில் படுத்திருந்த பாஸ்கரன் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்ததாகத் தோன்றியது. அவள் எழுந்திருந்து விளக்கை அணைத்து விட்டுப் படுத்துக் கொண்டாள்.

அறையை இருள் கவிந்து கொண்டதே தவிர, அக மனத்தில் ஒளி பளிச்சிட்டது. எந்தப் பெண்ணும் இப்படி ஒரு காரியத்தைச் செய்யத் துணியமாட்டாள். தனக்கு இந்தத் துணிச்சல் எங்இருந்து வந்தது என்று அவளுக்கே ஆச்சரியமாக இருந்தது. மரியாதையாக அவள் அன்று இரவு ரயிலில் ஊருக்குப் போயிருக்க வேண்டும். அப்படி அவள் செய்யாதது வரம்பு மீறிய காரியமாகப் பட்டது. அத்துடன் அது அவளுடைய சுபாவத்துக்குக் கொஞ்சமும் பொருந்தாத செயல். இதை நினைத்து அவளுடைய மனச்சாட்சி அவளைத் தூங்க விடாமல் உறுத்திக் கொண்டேயிருந்தது.

---

சாயங்காலமெல்லாம் இருந்த பரவசத்தில் இது அவ்வளவாக அவள் நெஞ்சில் உறைக்கவில்லை. புதிய பியட் வண்டியில் அவன் அருகில் உட்கார்ந்து கொண்டிருப்பதே வானத்தில் உல்லாசமாகப் பறப்பது போலிருந்தது. அவன் தன் முகத்தைப் பார்த்து முறுவலோடு பேசும் போதும் அவன் தன்னைப் பாராத போது கண் நிறைந்த அவன் முகத்



தைப் பககவாட்டில் பார்க்கும்போதும் அவளுக்கு அந்தக் கணம் ஒன்றுதான் நிச்சயமானதாக, நிலையானதாக இருந்தது. அடுத்தகணம் என்ற ஒன்று உடனே அடுத்து வரும் என்ற நினைவுக்கு வரவில்லை. நாளை என்பதோ, எதிர்காலம் என்பதோ வெறும் கற்பனைதான்; அந்த நினைப்புக்கே இடமும் இல்லை; நேரமும் இல்லை. அவனுடைய பேச்சிலும் சிரிப்பிலும் அவ்வளவு தோய்ந்து போய்விட்டாள். அவன் அருகில் அமர்ந்திருந்த அந்த நேரங்களில் அவள் சுயமாகச் சிந்திக்கிற தன்மையை இழந்து விட்டாள். போகும் இடங்களில் எல்லாம் எல்லாரும் அவர்களையே திரும்பித் திரும்பிப் பார்த்தார்கள். ஏன் அப்படி எல்லாரும் கவனித்தார்களோ, அவளுக்குத் தெரியாது. எப்படிப் பார்த்திருந்தாலும் அவளுக்கு என்னவோ பெருமையாகத்தான் இருந்தது. காலமெல்லாம் இப்படியே இனித்திருக்கும் என்பதுபோலத் தோன்றியது.

திருவனந்தபுரம் சென்ட்ரல் ரயில் நிலையம் வழியாக வண்டி வந்தபோது அவன் அவளை ஜாடையாகப் பார்த்து விட்டுச் சிரித்தான்.

''எனக்குத் தெரியும். இப்படியெல்லாம் பரிகாசம் பண்ணினால் இங்கேயே இறங்கிப் போயிடுவேன். எனக்குத் தனியாகப் போகத் தெரியும்'' என்றாள் யாமினி.

''என்னை நடுவழியிலே விட்டுட்டு உன்னாலே போக முடியாது. அது எனக்குத் தெரியும்'' என்றான் பாஸ்கரன்.

# காணிக்கை



''யாரோ ஒருத்தி பேரைச் சொன்னேளே, அவளை நினைச்சிண்டு பேசறேளாக்கும்!''

''ஓ! உனக்குப் பொறாமை, அவளிடம்.''

''உங்களுக்கு 'லவ்' அவளிடம்...!''

பாஸ்கரனின் முகம் சட்டென்று கன்றியது. இதைக் கண்டதும் யாமினி தன் உதட்டைக் கடித்துக் கொண்டாள். அந்த வார்த்தையை அவள் வாயால் சொல்லியிருக்கக் கூடாது தான்.

''உனக்குத் தெரியுமா யாமினி,

**ஆர்வி**

அவள் என்னுடைய சிநேகிதன் ஒருவனுடைய மனைவி !''

''அது தெரியாது.''

''மறுபடியும் சொல்றேன். அவள் இப்போது இல்லே; அவனும் இல்லே.''

''அதுவும் தெரியாது.''

''இப்பவாவது தெரிஞ்சுதா?''

''இப்பத்தான் தெரிஞ்சுது.''

அதன் பிறகு வண்டி மௌனமாகவே ஹோட்டலுக்குத் திரும்பியது. அவன் வண்டியின் இஞ்சினை நிறுத்தச் சாவியைத் திருகிய போது அவள் அவன் கையை இரு கைகளாலும் பற்றிக் கொண்டாள். அவன் அவளை வியப்புடன் ஏறிட்டுப் பார்த்தான்.

''கோபமா ?'' என்று கேட்டாள் யாமினி.

''எதுக்கு ?''

''நான் அவளைப் பத்திச் சொன்னதுக்கு !''

பாஸ்கரன் கனைப்பாகச் சிரித்தான்.

'' சேச்சே, அதெல்லாம் இல்லே, ஊகும் !''

'' இல்லேன்னு எங்கிட்டே ஏன் பேசல்லே ?''

''ஒரு காரணமும் இல்லே. சும்மாத் தான்!'' என்று அவன் தன் கையை விடுவித்துக் கொள்ள முயன்றான்.

''நான் விடமாட்டேன். எனக்குத் தெரியும். உங்களுக்கு என்மேலே கோபம்தான்.''

''சரி, விட வேண்டாம். உனக்கு ஆசையாக இருந்தால் கையை இன்னும் கெட்டியாகப் பிடிச்சுக்கோ. யாராவது பார்க்கப் போகிறார்களேன்னு சொன்னேன். எனக்கென்ன ?''

''பார்த்தால் பார்க்கட்டும். வேணுமானால் உள்ளே போய் ஹோட்டல் ரிஜிஸ்தரையும் பார்த்துட்டு வரட்டும். எனக்குப் பயமில்லே.''

'' முகமெல்லாம் எப்படிச் சிவந்து போச்சு !''

''அதையும் பார்க்கட்டும்.''

''கோபமான்னு கேட்டியே. இப்ப யாருக்குக் கோபம் ? உனக்கா, எனக்கா ?'' என்று மெல்லச் சிரித்துக் கொண்டே மற்றொரு கையால் அவள் கைகளைச் சேர்த்துப் பிடித்தான்.

''ஒண்ணும் சிரிச்சு மழுப்ப வேண்டாம் !'' என்று தன் கைக்குள் சிக்கியிருந்த கையை நறுக்கென்று கிள்ளி விட்டு, கையை எடுத்துக் கொண்டாள்.

''ஸ்... அப்பா!'' என்றான் அவன். உண்மையாகவே அவள் அப்படி அழுத்திக் கிள்ளிவிட்டாள். நகம் பதிந்த கையை அவளிடம் காட்டினான்.

அப்போது அப்படிக் கிள்ளியதற்கு யாமினி இப்போதுதான் வருத்தப்பட்டாள். நகம் பதிந்து, சதை பெயர்ந்திருந்தது கண்ணிலேயே நின்றது. அவள் அறியாமலே வாய் சூள் கொட்டியது.

'' நீ இன்னும் தூங்கல்லியா, யாமினி ?''

அவள் வாயைக் கெட்டியாக மூடிக் கொண்டிருந்தாள்.

'' விளக்கை வேணுமானால் போடட்டுமா ?'' என்று கேட்டான்.

அதற்கும் பதில் சொல்லாமல் தூங்குவது போல் இருந்தாள். ஆனால் பாஸ்கரன் எழுந்திருந்து விளக்கைப் போடுவான் என்று எதிர்பார்க்கவில்லை அவள். விளக்கின் வெளிச்சத்தில் கண்கள் இறுக மூடிக் கொண்டன.

''இவ்வளவு வருத்தப்படுகிறவள், ஊருக்குப் போய்த்தான் ஆகணும்னு அழுத்தமாய்ச் சொல்லியிருக்கலாம். மதிப்பாப் போகலேன்னு சொல்லிட்டு, அப்புறம் வருத்தப்பட்டால் என்ன பண்றது?'' என்று சொல்லிக்கொண்டே அவன் பானைத் தண்ணீரை எடுத்துக் குடித்தான். பிறகு விளக்கை முன் போல அணைத்துவிட்டுப் படுத்துக் கொண்டான்.

'' நான் ஒண்ணும் அதுக்காக வருத்தப்படல்லே !'' என்று இரைந்து கத்தலாமா என்று இருந்தது யாமினிக்கு. ஆனால் பேசாமல் இருந்து விட்டாள். 'நான் தூங்கலியாம்! இவர் மட்டும் என்ன தூங்கி வாழ்ந்தாராம்!' என்று நினைத்துக் கொண்டாள். 'இவரை இப்படியே விட்டு விட்டு, நான் மட்டும் தனியாகத் திரும்பிப் போயிருந்தால் தான் வருத்தப்படுவேன். இதை இவருக்கு யார் சொல்வார்கள்?' என்று தனக்குள் முறையிட்டுக் கொண்டாள்.

அதே சமயத்தில் தான் செய்திருக்கிற முடிவு தவறானது என்றும், பெரிய அபவாதத்துக்கு இடம் கொடுக்கக் கூடியது என்றும் யாமினிக்குத் தெளிவாகப் புரிந்தது. அவள் வீட்டுக்கு இது தெரிந்தால் அவளுடைய தோலை உரித்து எடுத்து விடுவார்கள்.

யாமினிக்கு அழுகையே வந்தது.

சுசிலாகூட இதை ஒப்புக்கொள்ள மாட்டாள். 'இந்தத் தலைமை ஆசிரியர் தம்பியை உனக்கு எத்தனை நாட்களாகத் தெரியும்?' என்று கேட்பாள். 'இவரை எவ்வளவு தூரம் தெரியும்?' என்று கேட்பாள். ஒன்றுமே தெரியாது என்றால், 'இந்த அசட்டுக் காரியத்தைச் செய்யலாமா?' என்று கேட்பாள். அவளுக்கு முதலில் என்ன சமாதானம் சொல்வது?

இரு கண்களிலிருந்தும் கண்ணீர் வடிய இருளிலே நிலை கொள்ளாமல் படுத்திருந்த யாமினிக்கு எப்போது உறக்

# கீதைக் கதைகள்



" 'என்னவும் அரிதான இரகசியங்களினுள்ளே மௌனமாக இருக்கிறவனும் யானே யாவேன்' என்றான் கீதாசாரியன். அந்த வாசகம் நினைவுக்கு வரவே யான் மௌனமாக இருக்கிறேன்...."

## 19. சீர்

அவன் படைத்தனன் ஐம்பொறிகளை. எனினும், அவற்றிற்கிடையேயும் மூண்டது சச்சரவு.

"யானே எல்லாப் புலன்களிலும் முதலில் விழிப்பு நிலை எய்துபவன். பிரபஞ்சத் தோற்றத்திற்கு ஆதிநிமித்தமாய் அமைந்த பிரணவ மந்திரத்தைக் கேட்டின்புற்றவனும் யானே. எனவே, மாட்சிமை பெற்றவனும் யானே." தோதிடைய பெருமையுடன் செவி பேசிற்று.

"உயிர் வாழ்வதற்கு இன்றியமையாத பிராண வாயு உட்செல்லும் வாயில் யான். இதுமட்டுமோ என் பெருமை? நறுமணத்தை உணர உதவுபவன் யார்?" என மூக்கு தன் புகழை அளந்தது.

"செவிடனும் வாழ்கிறான், மூக்கறையனும் வாழ்கிறான்! துர்நாற்றத்தைச் சகிக்க முடியுமா? உயிர் தங்குவதற்கு ஆதாரம் மெய்யாகிய யானே. இன்பங்களுள் கலவி இன்பமே தலையாயது என்பதைப் போகிகள் அறிவர். அவ்வற்புத இன்ப அனுபவம் மெய் என்னும் வழி நின்று சித்திக்கின்றது. அதனை மறக்க வேண்டாம்" என்றது மெய்.

"வட்டக் கருவிழி, விழுந்திடும் வேல்விழி, குளிர் மதுர் குவளை விழி, துள்ளும் கயல்விழி, வெல்லும் வில் விழி.... என்று பலபட என்னைப் போன்று வேறு எந்தப் புலனையாவது புலவன் பாடியிருக்கிறானா? கண்ணை இழந்தவன் ஒளியை இழக்கிறான். ஒளியை இழந்தவன் சகல இருக் தரிசனங்களையும் இழக்கிறான். மெய், கேவலம் சிற்றின்ப நுகர்ச்சிக்கு உட்படுவதைப் பிரமாதப்படுத்துகின்றது. குருநிலத்தில் பார்த்தனுக்குப் பரமாத்மாவின் விசுவரூப தரிசனம் நானின்றிச் சித்தித்திருக்குமா?" என்று கவிஞர்களையும் புராணச் செய்திகளையும் தன் கட்சியை நிலைநாட்ட இழுத்தது கண்.

"செவியும் ஓசையும், மூக்கும் நாற்றமும், உடலும் ஊறும், கண்ணும் ஒளியும்! அவ்வளவுதானே? மொழிகள் தோன்ற யானே காரணன். மேலும் யானே சுவையின் வடிவம். இச்சுவையும் நான்கு வழிகளில் ஊட்டுகிறேன். சோறு முதலிய உண்ணுதற் பொருள்களிலும், கறி முதலிய தின்னுதற் பொருள்களிலும், நீர் முதலிய பருகுதற் பொருள்களிலும் தேன் முதலிய நக்குதற் பொருள்களிலும் சுவை அறிந்து சொல்லுகிறேன். இனி, சுவையும் ஆறு வகைத்து...." என நா தன் வன்மை சாற்றித் தொடர்ந்து பேசலாயிற்று.

"மூளையே! இவருள் யார் உயர்ந்தவன்? நீயே தீர்ப்புக் கூறு..." எனச் செவி குறுக்கிட்டது.

" 'என்னவும் அரிதான இரகசியங்களினுள்ளே மௌனமாக இருக்கிறவனும் யானேயாவேன்' என்றான் கீதாசாரியன். அந்த வாசகம் நினைவுக்கு வரவே யான் மௌனமாக இருக்கின்றேன்" என்று மூளை அடக்கமாகக் கூறியது. - எஸ். பொன்னுத்துரை

---

கம் வந்ததோ, தெரியவில்லை. அப்படியே கண்ணயர்ந்து விட்டாள்.

தூக்கத்திலே உண்மையாக நடப்பது போல எத்தனையோ நிகழ்ச்சிகள், திருப்பங்கள். அத்தனையும் கனவு... கனவு!

அவள் வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்தபோது மணி நாலே முக்கால். விளக்கைப் போட்டுவிட்டு, பாஸ்கரனைப் பார்த்தாள். கனவிலே கண்ட அவன் முகத்தை விழிப்பிலே பார்க்கக் கூச்சமாக இருந்தது. இருந்தாலும் தூங்குகிறபோதுகூட அந்த முகம் எத்தனை அழகாக இருக்கிறது! அந்த அழகிலே தவழ்ந்த சாந்தத்தைக் கண்டு அவள் ஆறுதல் கொண்டாள்.

'இவரைத் தெரிந்துகொள்ளப் பல காலம் வேண்டியதில்லை. இந்த ஒரு கணமே போதும்!' என்று அவள் தன்னையே தேற்றிக் கொண்டாள்.

## அத்தியாயம் 20

என்னதான் யாமினி தன்னைத் தேற்றிக் கொண்டாலும் பாஸ்கரனோடு தொடர்ந்து பிரயாணம் செய்யலாம் என்கிற மனத் தெம்பு அவளுக்கு உண்டாகவில்லை. மனத்துக்குள்ளே தோன்றியிருந்த பீதி அவளை அச்சுறுத்திக் கொண்டேயிருந்தது. குளிக்கிற போதே அவள் ஒரு முடிவுக்கு வந்து விட்டாள். காலையில் புறப்படுகிற வண்டியில் அவள் ஊர் திரும்பிவிடத்தான் வேண்டும். இரவெல்லாம் அவள் உறங்கினாலும் அவளுடைய உள்மனம் விழித்திருந்து இந்தப் பிரச்னைக்கு ஒரு தீர்வு கண்டுவிட்டதாகத் தோன்றியது.

அவள் மனம் இப்பொழுது தெளிந்திருந்தது. அதில் குழப்பமோ, சபலமோ இல்லை. குடும்பத்தின் கௌரவம் சம்பந்தப்பட்ட விஷயங்களில் அவள்

எதிர்நீச்சல் போடுவதற்கில்லை. சரியோ தவறோ, அவள் உறுதியாக இருந்துதான் தீர வேண்டும்.

பாஸ்கரன் கண் விழித்ததுமே அவள் புறப்படுவதற்குத் தயாராக இருப்பதைக் கண்டான்.

"என்ன இது, ப்ரோகிராம் மாறிப் போச்சா?"

"ஆமாம்; மாறிப் போச்சு."

"ராத்திரியே எனக்குத் தெரிஞ்சு போச்சு, மாறிப் போகும்னு."

ஒன்றும் சொல்லாமல் அவன் குளியலறைக்குப் போனான். நிதானமாக நீராடிவிட்டு மெதுவாக வந்தான். அதற்குள் யாமினி நேரமாகிவிடப் போகிறதே என்று தவியாகத் தவித்துப் போனாள்.

"ஏழேகாலுக்கு இல்லே வண்டி?"

"இருக்கும்; எப்ப இருந்தால் என்ன? ஊருக்கு எழுதிப் போட்டாச்சு. இனிமே எப்பப் போனாலும் ஒண்ணுதானே?"

"இல்லே; நான் போகத்தான் வேண்டும். நான் கூட வரது சரியில்லே."

"அப்படி யார் சொன்னது?"

"நான்தான் சொல்றேன். அது அசட்டுத்தனம். முறையில்லே."

"எப்ப இந்த ஞானோதயம்? ராத்திரியா, பொழுது விடிஞ்ச பிறகா?"

"ராத்திரியே யோசிச்சேன். இப்பத்தான் முடிவுக்கு வந்தேன்."

பாஸ்கரன் இதைக் கேட்டு மெல்லச் சிரித்தான்.

"அத்தனை நாழியா ஆச்சு முடிவுக்கு வர? ஏது, உனக்கு இது பொருத்தமில்லாமல் இருக்கே. நீதான் எதையும் சீக்கிரம் 'முடிவு' பண்ணுகிறவளாச்சே!"

"இப்பவும் விரைவாகத்தான் முடிவு செய்திருக்கேன்!"

"குருவாயூர் போயிட்டுப் போயிடலாம்."

"வேண்டாம்; இப்ப என்ன க்ஷேத்திராடனமா புறப்பட்டிருக்கோம்? நாங்க பிக்னிக்கா வந்தோம்; நீங்க உங்க பிஸினஸா வந்திருக்கேள். இப்ப அங்கே போகாட்ட என்ன? இன்னொரு சமயம் போனால் போச்சு."

"போகலாம்; இரண்டு பேருமாச் சேரணுமே."

"ப்ரார்த்தனையா என்ன?"

"என் வரையில் அப்படித்தான்."

உடனே இதற்குப் பதில் சொல்ல முடியாமல் தயங்கிய யாமினி சற்றுப் பொறுத்து, "தனித் தனியாகவும் போகலாம்; நான் இன்னொரு சமயம் போயிக்கிறேன்!" என்றாள்.

பாஸ்கரன் அவளையே தீவிரமாகப் பார்த்து விட்டு, "சரி; இன்னும் வேண்டிய நேரம் இருக்கு. அதுக்குள்ளே டிபனைச் சாப்பிடுவோம். சாப்பிட்டுண்டே பேசிக்கலாம்..." என்றான்.

"என்ன பேசினாலும் முடிவு அது தான்."

"உம்; அப்படியா?"

"அப்படியேதான்! நீங்க ஒண்ணும் இதை மாத்தறதுக்குப் பார்க்க வேண்டாம். என் நிலைமையிலே இருந்தாத்தான் உங்களுக்கு அந்தச் சங்கடமெல்லாம் புரியும். நாம இருக்கிறது தமிழ் நாடு. அமெரிக்கா இல்லே."

அவளுடைய படபடப்பைக் கண்டு அவனுக்கு மறுபடியும் சிரிப்புத்தான் வந்தது. சிரிக்கிறபோது அவன் பற்களும் கண்களும் எப்படிப் பளிச்சிடுகின்றன! இப்படியா மோகனமாக மயக்கும்! யாமினி கூச்சத்தால் முகத்தைத் திருப்பிக்கொண்டாள்.

"சரி வா, போகலாம்!"

டிபன் சாப்பிடுகிறபோது, "இந்தச் சட்டினிக்குக்கூட என் மேலே கோபம் போலிருக்கு. கன்னுனு கொளுத்தறது" என்றான் பாஸ்கரன்.

சிறிது நேரம்வரை பதிலே இல்லே.

பிறகு, "நீங்க ஒண்ணும் சாப்பிடாமே என்னையே பாத்திண்டிருக்க வேண்டாம். வீணு நேரமாகிறது, சர்வர்கூடப் பார்த்துச் சிரிப்பை அடக்கிக்கிண்டு போறான்!" என்றாள் அவள்.

"அந்த மடையனைக் கூப்பிட்டு, நன்னாச் சிரிச்சுட்டுப் போகச் சொல்லட்டுமா?"

"உங்களுக்கு இப்பத்தான் விளையாட்டா இருக்கு. என்னைக் கொண்டு விட உங்களுக்கு விருப்பமில்லாவிட்டால் நானே டாக்ஸியை எடுத்துண்டு போயிக்கிறேன். அவ்வளவுதானே?"

"ஓ! அது ரொம்பத் தப்பாச்சே!"

"தப்புன்னு மார்க் போட வேண்டாம்."

"உன்னைப் போலத்தான் ஒரு யஜமானி இருக்கணும்!"

"அப்படியே கிடைப்பாள் உங்களுக்கு!"

"ஏன், உனக்கு என்னவாம்?"

"எனக்கு இப்ப அவசரம்; அவ்வளவு தான்!"

"எனக்குக் கொண்டு விடத் தெரியும்."

"ரயில் ஸ்டேஷனை விட்டுப் போனப்புறமா?"

"போனப்புறம் கூட எனக்குக் கொண்டுவிடத் தெரியும்."

"அதாவது இந்த ரயிலுக்கு முன்னாலே அடுத்த ஜங்ஷனுக்குப் போய் அங்கு ஏறிக்கிறப்பலே!"

''அது மட்டுமில்லே; இந்த டிரெயினே இல்லாமல் போனால்கூட எனக்குக் கொண்டுவிடத் தெரியும்.''

''திருச்சிக்கேதானே?''

''வேணுமானால் வீரசோழபுரத்துக்கே சொல்றேன்!''

யாமினியின் முகத்தில் புன்னகை அரும்பிற்று.

''அப்பாடா! இந்தப் புன்னகையை இனிமே பார்ப்போமான்னு போயிட்டுது இத்தனை நேரம்!''

யாமினி இருபுறமும் பார்த்துவிட்டு, ''ஆசையைப் பார், ஆசையை!'' என்று முணுமுணுத்துக் கொண்டாள்.

அவர்கள் அறையை அடைந்ததும், பாஸ்கரன் ஹோல்டாலைச் சுருட்டிக் கட்டினான். பெட்டியைப் பூட்டி எடுத்துக் கொண்டான். பையனைக் கூப்பிட்டு, 'பில்' கொண்டு வரும்படி ஏவினான்.

''நீங்களும் இப்பவே புறப்படறீங்களா?''

''பின்னே எனக்கு மட்டும் இங்கே என்ன வேலை இனிமே?''

''வண்டி எனக்குக் கிடைக்குமோ இல்லையோ?''

''போனால் கிடைக்கும். நாம எதுக்காக ஸ்டேஷனுக்குப் போகணும்?''

''பின்னே?''

''நேரே கொல்லத்துக்குப் போக வேண்டியதுதான். இந்த வண்டி வந்து சேருவதற்கு முன்னாலே நாம போயிடுவோம்.''

அப்புறம்தான் யாமினிக்கு நல்ல மூச்சு வந்தது. பாஸ்கரன் இருக்கும் போது எதற்கும் பயப்பட வேண்டியதில்லை என்ற தெம்பு உண்டாயிற்று. கொல்லம் போகிற வரையில் சேர்ந்து போகலாம் என்ற சந்தோஷமும் ஏற்பட்டது.

ஹோட்டலுக்குச் சேர வேண்டிய பணத்தைக் கொடுத்துவிட்டு வெளியில் வந்தபோது மணி ஏழேகால். வண்டிக்குத் தண்ணீரும் பெட்ரோலும் நிரப்பிக் கொண்டு புறப்பட்ட போது மணி ஏழே முக்கால்.

**கா**லை வேளையில் வண்டியில் பயணம் செய்வது மிகவும் சுகமாக இருந்தது. அதிலும் அவன் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு போகிறபோது ஏற்பட்ட இன்பக் கிளுகிளுப்பை அவள் மிக துல்லியமாக உணர்ந்தாள். அவன் வண்டியைச் செலுத்திக் கொண்டு போகிற அழகை இன்றைக்கெல்லாம் ரசித்துக்கொண்டே இருக்கலாம் போலிருந்தது. அவனை விட்டு இன்னும் சில மணி நேரத்தில் பிரியப் போகிறோமே என்று அவளுக்கு ஏக்கமாகவும் அங்கலாய்ப்பாகவும் இருந்தது.

வெறுமே அவள் வாயைச் சீண்ட எண்ணி, ''புரோகிராம் இப்படி மாறினதிலே உங்களுக்கு ஏமாற்றம்தானே?'' என்றாள் அவள்.

''உனக்கு என்ன கவலை அதைப் பற்றி?''

''வருத்தமாய் இருந்தால் சமாதானப்படுத்தலாமேன்னுதான்!''

''எப்படிச் சமாதானப்படுத்துவே?''

''அதை எப்படிச் சொல்வேன்? டிரை பண்ணிப் பார்ப்பேன்.''

''உண்மையில் அக்கறை இருந்தால் அதுக்கு ஒரு வழி இருக்கு.''

''எனக்குத் தெரியும். நீங்க புதிசா வாங்கின டிரஸ்ஸை எடுத்துக்கணும். அதுதானே?''

''அதுமட்டுமில்லே. அதிலே ஒரு செட்டை இப்பவே எடுத்து உடுத்திக்கணும். அந்த ஸில்க் ஸ்கார்ஃபைத் தலையிலே கட்டிண்டால் எத்தனை அழகா இருக்கும் தெரியுமா? தலை காற்றிலே சிலும்பாது.''

''அதெப்படி இந்த நடு ரோட்டிலே மாத்திக் கட்டிக்க முடியும்?''

''அது சரி; ஆனால் இதைக் கூடவா போட்டுக்க முடியாது?'' என்று தன் பையிலிருந்த அழகிய சிறு பெட்டியை எடுத்து அவளிடம் நீட்டினான்.

அவள் அதை வாங்கிக் கொண்டாள். அதனுள் இருந்த மோதிரத்தையும் அவன் முகத்தையும் கொஞ்ச நேரம் மாறி மாறிப் பார்த்துக் கொண்டே இருந்தாள். அவன் சாலையிலேயே கவனமாக இருப்பது போல நடித்தான்.

''இதுக்கு என்ன அர்த்தம்? எனக்கு உங்கள் பொல்லாத்தனம் நேத்திக்கே தெரியும். இதனாலே ஒண்ணும் குடிமுழுகிப் போயிடப் போறதில்லே!'' என்று அதை எடுத்துத் தன் மோதிர விரலில் அணிந்து கொண்டாள். அளவெடுத்தது போல் அது அத்தனை பொருத்தமாய் இருந்தது.

''இப்பத் திருப்திதானே?''

''உனக்கு?''

''உங்களுக்கு எப்படியோ அப்படித்தான் எனக்கும்.''

''அதே போல இப்ப என் புரோகிராமும் மாறிப் போச்சு.''

''என்ன மாறுதல்?''

''வண்டி கொல்லத்துக்குப் போய், உன்னை இறக்கி விடப் போறதில்லே. நேரே திருச்சிக்கே போய் இறக்கிவிடப் போறது!''

அவள் அவனைப் பார்த்தாள். அவன் சிரித்தான். திகைக்கவும் மயங்கவும் வைக்கிற சிரிப்பு. (தொடரும்)

# ஒரே சலவையில் 3 வழிகளில் செயல் புரிந்து...




# டெட் துணிகளை அதிவெண்மையாக்குகிறது

— மற்ற எந்த பவுடரையும்விட.

**இதோ, எப்படி என்று பாருங்கள்:**

1. **டெட்** டிலுள்ள தனிப்பட்ட சக்திவாய்ந்த பொருள் அதி விரைவாகத் துணியில் ஊடுருவிச் சென்று, மறைந்துள்ள அழுக்கைக்கூட கோடியில் விரட்டி அடிக்கிறது. துணிகள் வெண்மையாகின்றன.
2. **டெட்** அழுக்கை வெளிக்கொணர்ந்த பிறகு, அது மீண்டும் படியாமல் தடுக்கிறது; துணிகள் அதிக சுத்தமாகின்றன; சுத்தமாகவே நீடித்து இருக்கின்றன.
3. **டெட்** துணிகளை அதிவெண்மையாக்குகிறது. துணிகள் முன்னைவிட அதிவெண்மையுடன் பளிச்சிடுகின்றன. (நீலம் அல்லது வெண்மைச் சாதனம் சேர்க்கவேண்டிய அவசியமில்லை.)

**இன்றே டெட் வாங்குங்கள்!** ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ், பம்பாய்.

SHILPI HPMA 38A/70 TAM

## 20. தோழர்களின் புரட்சி

காசிநாதன் மில்லுக்கு அருகிலுள்ள ஒரு மரத்தின்மேல் சாமிநாதன் கையில் காமிராவுடன் கிளைகளுக்கிடையில் மறைவாக அமர்ந்திருந்தான்.

மணி மூன்றிருக்கும். வெயில் கடுமையாக இருந்தது. திடீரென்று மில் காம்பவுண்டின் பெரிய கதவு திறந்தது. நல்லதம்பி வெளியே வந்து பேச்சு வார்த்தை தோல்வியடைந்து விட்டதாகவும், தொடர்ந்து வேலைநிறுத்தம் செய்ய வேண்டும் என்றும் கூறினான். சில வாரங்களாக வருமானம் இன்றிச் சிரமப்பட்டுக் கொண்டிருந்த தொழிலாளர் கூட்டத்தில் பரபரப்புத் தோன்றியது. சாமிநாதன், சுற்றுமுற்றும் பார்த்தான். ஒரு போலீஸைக் கூடக் காணோம்.

சற்று நேரத்துக்குப் பிறகு மில்லின் ஜெனரல் மானேஜரின் கார் காம்பவுண்டுக்குள்ளிருந்து வெளியே வந்ததும், தொழிலாளர் கூட்டம், அதைச் சூழ்ந்து கொண்டது. காருக்குள்ளிருந்தே மானேஜர் தொழிலாளர்களுடன் பேச முயன்றார். அப்போது கூட்டத்திலிருந்த ஒருவன் ஒரு பெரிய கல்லை எடுத்து மானேஜரின் தலை மீது வீசியெறிந்தான். கல்லடி பட்டதும் மானேஜர் மயங்கிக் காருக்குள்ளேயே சாய்ந்துவிட்டார். காருக்குள் இரத்தம் பெருகியது. நிலைமையை உணர்ந்து கொண்ட கார் டிரைவர் மானேஜரைக் காப்பாற்றும் பொருட்டு, காரின் ஹாரனைப் பலமாக ஒலிக்கச் செய்து கொண்டே காரை வேகமாகச் செலுத்தத் தொடங்கினான். திடீரென்று காரின் வேகம் அதிகரிக்கவே, காரைப் பிடித்துக் கொண்டிருந்த சிலர் கீழே விழுந்தனர். அதே சமயம் கற்கள் மழைமாதிரி காரின் மீது பொழியத் தொடங்கி விட்டன. காரின் வேகம் இன்னும் அதிகரித்தது. கூட்டத்துக்குள் நுழைந்து கார் பாய்ந்து சென்றதால் ஒரு தொழிலாளி, சக்கரத்தில் அடிபட்டுக் கால் முறிவடைந்து கீழே சாய்ந்தான். அதைக் கண்ணுற்றதும் கூட்டம் வெறி கொண்டது.

அப்போது நல்லதம்பி தன்னுடைய கூட்டாளிகளுக்கு ஏதோ சைகை மூலம் சொன்னதும் சிலர், கோஷமிட்டுக் கொண்டு மில்லுக்குள் புகுந்து ஓடத் தொடங்கினர். சற்று நேரத்தில் மில்லில் தீப்பற்றிக் கொண்டது. நிமிஷங்கள் செல்லச் செல்லத் தீயின் உக்கிரமும் அதிகமாகிக் கொண்டே போயிற்று. இப்படி எத்தனை நேரம் சென்றதோ, ஒருவித திகைப்பினூடே புகைப்படங்கள் எடுத்துக் கொண்டிருந்த சாமிநாதன் கவனிக்கவில்லை! இரண்டு லாரிகளில் போலீஸார் வந்து இறங்கினார்கள்..... தடியடிப் பிரயோகம் செய்து மில்லுக்குள் நுழைந்த தொழிலாளர்களை வெளியே விரட்டினார்கள். தீயணைக்கும் படையினர் வந்து தீவிரமாகத் தங்கள் கடமையில் ஈடுபட்டனர்.




மாலை ஏழு மணி யளவில் அந்த இடத்தில் அமைதி நிலவியது. போலீஸார் அந்தப் பகுதியைக் காத்து நின்றனர். சாமிநாதன் சோர்வுடன் மரத்தின் மீதிருந்து கீழே இறங்கினான். ஓசைப்படாமல் இருளில் மறைந்தவாறே ஸ்கூட்டரை நிறுத்தியிருந்த இடத்தை அடைந்தான்.

ஸ்கூட்டரில் காரியாலயத்தை நோக்கி விரைந்தான். ஒரு மூலையில் ஸ்கூட்டர் திரும்பியதும் எதிரே சற்றுத் தூரத்தில் ஒரு பெரிய ஊர்வலம் பெட்ரோமாக்ஸ் விளக்குகளுடன் கோஷமிட்டுக் கொண்டு வந்து கொண்டிருப்பதைக்



கண்டான். உடனே ஸ்கூட்டரைப் பக்கத்திலிருந்த ஒரு வீட்டுக் காம்பவுண்டுக்குள் வைத்து விட்டு உள்ளே இருந்தவாறே தெருவைக் கவனித்தான்.

''காளிநாதன் மில் மானேஜர்....''

''ஒழிக......''

''முதலாளி வர்க்கம்......''

''ஒழிக !......''

''பாட்டாளியின் காலை ஒடித்த மானேஜரைப்......''

''பழி வாங்குவோம்....''

''பழிக்குப் பழி....''

''வாங்கியே தீருவோம்.....''

# இதோ, ஒரு தீமையற்ற தலைவலி மாத்திரை!



## அவேதன்®

அற்புத 'எபெப்' அடங்கியது.

(என்-அஸிடில்-பி-எமினோ:பினல்)



தலைவலி மாத்திரை ஏதாவது தீங்கு விளைவிக்குமோ என்கிற பயத்தால், நாம் எத்தனையோ தடவை தலைவலியைப் பொறுத்துக் கொண்டு அவதிப்படுகிறோம்.

ஆனால் அப்படி அவதிப்பட வேண்டாம். அவேதன் தீமையில்லாமல் தலைவலியைப் போக்குகிறது. ஏனெனில், அவேதனில் அற்புத 'எபெப்' அடங்கியுள்ளது. அவேதன் சாப்பிட்ட பின் எவ்வித துன்பகரமான பின் விளைவுகளும் ஏற்படாது; துரிதமான, நிச்சய நிவாரணம் கிடைக்கும்.

எனவே, தீமையற்ற முறையில் தலைவலியைப் போக்குங்கள். ஜலதோஷம், ஃப்ளூ மற்றும் இதர வலிகளையும் நோவுகளையும் கூடத்தான்! 'எபெப்' அடங்கிய அவேதன் சாப்பிடுங்கள்.

**2 டேப்லெட்டுகள்: 15 பைசா.**






அவேதன்— அற்புத 'எபெப்' அடங்கியது. தலைவலி, ஜலதோஷம், மற்றும் ஃப்ளூவிலிருந்து தீமையற்ற நிச்சய நிவாரணம் அளிக்கிறது.

SQUIBB® SARABHAI CHEMICALS

* இ. ஆர். ஸ்க்விப் அண்டு ஸன்ஸ் இன்கார்ப்பரேடெட்டின் ரெஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க்கைக் குறிக்கிறது. காரம்சந்த் ப்ரேம்சந்த் பிரைவேட் லிமிடெட் இதை உபயோகிக்க உரிமை பெற்றவர்கள்.

கோஷம் அந்த வீதியையே அதிர வைத்தது. கூட்டத்தின் முன்னால் ஒரு தொழிலாளியை ஒரு நாற்காலியில் வைத்துத் தூக்கிச் சென்றார்கள். அந்தத் தொழிலாளியின் காலில் கட்டு போடப்பட்டிருந்தது. காளிநாதன் மில்லின் வாசலில் மானேஜரின் கார்ச் சக்கரத்தில் மாட்டிக் கொண்ட தொழிலாளி அவன் என்பதைப் புரிந்து கொண்டான், சாமிநாதன். அதே சமயம் கல்லடிபட்ட மானேஜரின் ஞாபகம் வரவே, கூட்டம் அவனைக் கடந்ததும் பக்கத்திலிருந்த டெலிபோன் பூத்துக்குச் சென்று காளிநாதன் மில்லின் மானேஜரின் வீட்டுக்குப் போன் செய்தான். போனில் யாரோ ஒரு பெண், அழுதுகொண்டே சொன்ன செய்தியைக் கேட்டதும் சாமிநாதன் திகைத்துப் போய் ஃபோனைக் கையில் ஏந்திய படியே கல்லாகச் சமைந்து நின்றான்.

தூரத்திலிருந்து கோஷம் கேட்டுக் கொண்டிருந்தது —

"பாட்டாளியின் காலை முறித்த முதலாளி வர்க்கம்..."

"ஒழிக......"

"புரட்சி......"

"ஓங்குக......."

* * *

'பாரதமணி', அன்று அதிகப் பக்கங்களுடன் பிரசுரமாகி யிருந்தது. புளிய மரத்தின் மேலிருந்தபடி சுவாமிநாதன் எடுத்திருந்த ஒன்பது புகைப்படங்கள் அதில் அச்சாகியிருந்தன.

படங்களைப் பார்த்தவர்கள் மனத்தில் பீதியும் அருவருப்பும் கோபமும் மூண்டன. முரளியின் தலையங்கத்தைப் படித்தவர்கள் நீதியை உணர்ந்த இப்படி ஒரு பத்திரிகை இருக்கிறதே என்னும் திருப்தியில் பெருமூச்சு விட்டார்கள்.

தலையங்கத்தில் சம்பவங்களைக் குறிப்பிட்டுவிட்டு முரளி எழுதியிருந்தான்:

"...எந்த விநாடியும் நிலைமை விபரீதமாகலாம் என்று அரசாங்கத்துக்கு ஏற்கெனவே தெரியும். மில் நிர்வாகிகள் பேச்சு வார்த்தைக்கு முன்பே மந்திரிக்கு ஃபோன் செய்து போலீஸ் பாதுகாப்புக் கேட்டிருந்தார்கள். ஆனால், போலீஸ் உதவி மிகவும் தாமதமாகத்தான் வந்து சேர்ந்தது. அரசாங்கத்தின் கவனக் குறைவால் அல்லது பாரபட்சத்தால் காளிநாதன் மில் பற்றி எரிந்தது. மானேஜர் கலவரத்தின் காரணமாக உயிர் துறந்தார். தொழிலாளர்களின் ஓட்டு அதிகம் என்பதற்காக அவர்கள் எவ்விதம் வேண்டுமானாலும் நடந்து கொள்ள அனுமதிப்பது அரசாங்கத்துக்கு அழகல்ல. நம்முடைய ஜனநாயக நாட்டுக்கு இந்தச் சம்பவம் ஒரு வெட்கக்கேடு. வேறு ஒரு பக்கத்தில் வெளியாகியுள்ள புகைப் படங்களில் குற்றம் புரிந்தவர்களின் உருவங்கள் மிகத் தெளிவாகத் தெரிகின்றன. அதைக் கொண்டு குற்றவாளிகளைப் பிடித்துச் சட்ட பூர்வமாக நடவடிக்கை எடுக்க அரசாங்கம் தயங்காது என்று நம்புகிறோம். பெண்ணுக்குக் கற்பு நலனைப் பேணுவது எப்படிக் கடமையோ, அதேபோல் நாட்டை ஆளும் அரசின் தலைவர்களுக்கு நாட்டு நலனைப் பேணுவதுதான் முதல் கடமை. கட்சி நலனுக்காகவோ, சுயநலனுக்காகவோ நாட்டு நலனை ஏலம் விட்டுவிடலாகாது.

அரசியல் வாதிகளின் வலையில் சிக்கியிருக்கும் தொழிலாளர்களுக்கும் ஒரு விஷயத்தை ஞாபகமூட்டுகிறோம். வேலை நிறுத்தம் என்ற உரிமை தொழிலாளர்களுக்கு உண்டு. போராட்டங்கள் நடத்த உரிமை உண்டு. ஆனால் சமூகத் துரோகிகளின் பேச்சைக் கேட்டு அராஜகத்தில் அவர்கள் இறங்கும்போது அவர்கள் தங்கள் நலனுக்கே தீங்கு விளைவித்துக் கொள்ளுகிறார்கள். தங்களுடைய உரிமைகளுக்குத் தாங்களே சமாதி எழுப்பிக் கொள்ளுகிறார்கள்."

இந்தத் தலையங்கம் மக்களிடையே பரபரப்பையும் உற்சாகத்தையும் ஊட்டியது. சட்டசபையிலும் சலசலப்பை ஏற்படுத்தியது. மந்திரிகள் சிலர் 'பாரதமணி' மீது கோபம் அடைந்திருந்தனர்.

குற்றவாளிகளைப் பிடித்துத் தண்டிப்பது அரசாங்கத்தின் கடமை என்று 'பாரதமணி' அடிக்கடி வற்புறுத்தி வந்தது. அரசாங்கத்துக்கு இக்கட்டான நிலை ஏற்பட்டு விட்டது. குற்றவாளிகளைப் பிடித்தால், தொழிலாளர்களின் கோபத்துக்கு ஆளாக வேண்டியிருக்கும். அது ஆளும் கட்சியைப் பாதிக்கும். குற்றவாளிகளை விட்டு விட்டால் மக்களின் வெறுப்புக்கும், நீதியற்ற அரசாங்கம் என்னும் அவச் சொல்லுக்கும் ஆளாக வேண்டியிருக்கும். கடைசியில் வேறு வழியில்லாமல் குற்றவாளிகளைப் பிடித்து வழக்குத் தொடர்ந்தது. தொடரப்பட்ட வழக்கை வாபஸ் பெற வேண்டும் என்று கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த தொழிலாளர்கள் கிளர்ச்சி செய்தார்கள். குற்றவாளிகளைக் கண்டுபிடிக்கப் 'பாரதமணி'யின் புகைப்படங்கள்தாம் உதவின என்பதால் நல்லதம்பிக்கு முரளிமீது அளவு கடந்த வெறுப்பும் கோபமும் மூண்டன.

## 70ன் மகிமை

"நமது நாட்டில் 1970ம் ஆண்டுக்கு ஒரு தனிச் சிறப்பு உண்டு. சென்ற 200 வருடங்களில் வேறு எந்த ஆண்டிலும் இந்த அளவுக்கு அரசியல் சௌகரியங்களுக்காகக் கொடுக்கப்பட்ட வாக்குறுதிகள் வெட்கமின்றி மீறப்பட்டது கிடையாது."

ஸ்ரீமாந் - என். ஏ. பால்கிவாலா - முத்து

---

காளிநாதன் மில்லில் தீப்பற்றி விட்டதால் முப்பது லட்சம் ரூபாய்க்கு மேல் பொருள் நஷ்டம் ஏற்பட்டு விட்டது. இனி அந்த மில்லைத் திரும்ப இயக்குவதில்லை என நிர்வாகிகள் முடிவு செய்து விட்டனர். வேலை இழந்து துயருற்றனர் தொழிலாளர்கள்.

• • •

ஒரு நாள் மாலை பேராசிரியரைப் பார்க்க அவருடைய வீட்டுக்குச் சென்றான் முரளி. அவனைக் கண்டதும் பேராசிரியர் உற்சாகத்துடன் அவனை வரவேற்றார். சாரதா போன பிறகு அன்றுதான் அவர் முகத்தில் மலர்ச்சியைக் கண்டான் முரளி.

"சாரதாவிடமிருந்து கடிதம் வந்திருக்கிறது. ஆனால் விலாசத்தையோ, எந்த ஊரிலிருந்து எழுதியிருக்கிறாள் என்பதையோ அறிய முடியவில்லை. என் மீது அவளுக்கு அக்கறை இருக்கிறது. என் உடம்பைக் கவனித்துக் கொள்ள வேண்டும் என்று எழுதியிருக்கிறாள். சொல்லாமல் கிளம்பிப் போனதற்கு மன்னிப்பும் கேட்டிருக்கிறாள். உன்னைப் பற்றியும் விசாரித்திருக்கிறாள்..." பேராசிரியர் உற்சாகத்தில் மூச்சு விடாமல் பேசினார். முரளி, சிரத்தையின்றிக் கேட்டுக் கொண்டிருந்தான். தன்னைப் பற்றியும் சாரதா விசாரித்திருக்கிறாள் என்பதைக் கேட்டும் அவன் உற்சாகமடையவில்லை. அவனை உற்றுப் பார்த்தார் பேராசிரியர்.

"நீ இங்கு அடிக்கடி வருகிறாயா என்று கேட்டிருக்கிறாள். நீ இங்கு அடிக்கடி வரவேண்டுமாம். உன்னுடைய துணைதான் எனக்கு ஆறுதலாக இருக்குமாம்... பார்த்தாயா, சாரதாவுக்கு எவ்வளவு அக்கறை..." என்றார் பாசத்துடன்.

மற்றவர்களுடைய ஆறுதலுக்கு நான் இருக்கிறேன்... ஆனால் என்னுடைய ஆறுதலுக்கு...?

முரளியின் மனம் முனகிக் கொண்டது. நீண்ட பெருமூச்சு விட்டான். சற்று நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டுப் பேராசிரியரிடம் விடைபெற்றுக் கொண்டு கிளப்பை நோக்கிக் காரைச் செலுத்தினான். அவனுடைய மனம் அமைதியின்றித் தவித்துக் கொண்டிருந்தது. புதிதாக வாங்க வேண்டிய அச்சு இயந்திரத்துக்கு ஐம்பதினாயிரம் ரூபாய் தேவைப்பட்டது. அந்தப் பணத்துக்கு என்ன செய்வது என்று புரியாமல் திகைத்தான். 'பாரதமணி' காரியாலயத்தில் உதவி ஆசிரியர்களுக்குச் சென்ற மாதச் சம்பளத்தை இன்னும் கொடுக்கவில்லை. பத்திரிகையின் விற்பனையும் குறைந்து கொண்டேயிருந்தது. சினிமாப்பட விளம்பரங்களும், அரசாங்க விளம்பரங்களும் 'பாரத மணி'க்குக் கிடைக்காமற் போகவே, 'பாரதமணி'யின் வருமானம் மிகவும் குறைந்துவிட்டது. இப்போது மிகவும் அவசரமாக ஐம்பதினாயிரம் ரூபாய் வேண்டும். யாரிடம் போய்க் கடன் கேட்பது? பேராசிரியரிடம் கேட்கலாமா என்று முதலில் யோசித்தான். ஆனால் சாரதா மீதிருந்த கோபம் கேட்க விடாமல் தடுத்து விட்டது. மிகுந்த மனச் சோர்வுடன் கிளப்புக்குள் நுழைந்தான். கிளப் வழக்கம்போல் கலகலப்பாயிருந்தது. வாசலில் முரளியைக் கண்டதுமே ராஜரத்தினம் விரைந்து வந்தார். அவருடைய பார்வையிலிருந்தே பரபரப்படைந்திருக்கிறார் என்பதைப் புரிந்து கொண்டான். அவனை ஒரு தனி இடத்துக்கு அழைத்துச் சென்று பேசினார்.

"உங்களை எங்கேயெல்லாம் தேடுவது? ...உங்கள் நண்பர் சாமிநாதன், என் வீட்டில் இருக்கிறார்" என்றார்.

முரளி ஒன்றும் புரியாமல் திகைத்தான்.

"சாமிநாதனை நாலைந்து பேர் தூக்கிக்கொண்டு வந்தார்கள். ரயில்வே ஸ்டேஷன் பக்கம் நான் வரும்போது கவனித்தேன். என் காரை நிறுத்தி ஏறிக் கொண்டார். கம்யூனிஸ்ட் கட்சி ஆட்களாயிருக்கும்" என்றார் ராஜரத்தினம்.

"ஓ...! நாளைக்குச் சாமிநாதன் கோர்ட்டில் சாட்சி சொல்லப் போகிறான். அவன்தானே காளிநாதன் மில்லின் சம்பவங்களைப் படம் பிடித்தவன். சாட்சி சொல்லாமல் செய்துவிடச் சதி நடக்கிறது போலிருக்கிறது" என்றான் முரளி.

"சாமிநாதன் அப்படித்தான் சொன்னார். ரயில்வே ஸ்டேஷன் பக்கம் சாமிநாதன் ஒரு சந்து வழியாக வந்தபோது,





# இந்த அன்பளிப்பு

## வழங்கினால் வாழ்வெல்லாம் களிப்பு!




## க்ளிக் III ரூ. 46.50 (வரிகள் தனி)

## தொடங்கவும், தொடர்ந்து படமெடுக்கவும் தலைசிறந்தது!

உங்கள் செல்வனுக்கும் செல்விக்கும் புகைப்படக்கலையை அறிமுகம் செய்து வையுங்கள்—க்ளிக் III காமிரா வாங்கித் தாருங்கள். அதைக் கையாளுவது எளிது. எதையும் அட்ஜஸ்ட் செய்ய வேண்டிய அவசியமில்லை. விரும்பும் காட்சியை ஃபோகஸ் செய்து, க்ளிக் பண்ண வேண்டும். இது சிக்கனமானது. ஒவ்வொரு 120 ரோல் பிலிமிலும் 12 பிரகாசமான—வர்ண அல்லது ப்ளாக் அண்ட் ஒயிட் படங்கள் எடுக்கலாம்.

ஆக்பா-கேவார்ட் கூட்டுறவுடன் தயாரிப்போர்:
தி நியூ இந்தியா இண்டஸ்ட்ரீஸ் லிட்., பரோடா.



ஏகபோக விநியோகஸ்தர்கள்:
**ஆக்பா-கேவார்ட் இந்தியா லிட்.**
பம்பாய் • புது டில்லி • கல்கத்தா • சென்னை

® இது போட்டோகிராபி பொருள்களைத் தயாரிக்கும் ஆக்பா-கேவார்ட் ஆண்ட்வர்ப்-லெவர்குஸன்-ன் ரெஜிஸ்டர்ட் ட்ரேட்மார்க்

**ஆக்பா க்ளிக்—இந்தியாவின் மிகப் பிரபல காமிரா**

CMAG-138-303TM




ஃப்ளூரோ கார்பன் முனை கொண்ட

# பிரின்ஸ்

ப்ளூ பிளேடுகளை உபயோகியுங்கள்

ஒருவன் இவரைச் சுட்டிக்காட்டினானாம். உடனே நான்கு பேர் இவரை நெருங்கி வந்தார்களாம். இவர் சந்தேகப்பட்டு வேகமாக நடந்திருக்கிறார். அவர்களும் தொடர்ந்து வேகமாக நடந்திருக்கிறார்கள். தெருவில் ஆள் நடமாட்டமும் இல்லையாம். அவர் பயந்து போய் ஓடியிருக்கிறார். அவர்களும் துரத்தியிருக்கிறார்கள். அந்தச் சமயத்தில்தான் அந்த வழியாக நான் போய்ச் சேர்ந்தேன். என் காரைக் கையைக் காட்டி நிறுத்தினார். பயத்தோடும், பதற்றத்தோடும் காருக்குள் ஏறி அமர்ந்து கொண்டு காப்பாற்றும்படி கூறினார். எனக்கு முதலில் அவர் யார் என்றே தெரியாது. காரில் போகும்போது எல்லாவற்றையும் விவரமாகக் கூறினார். அவரைப் பத்திரமாக என் வீட்டில் தங்க வைத்திருக்கிறேன். உங்களுக்குப் போன் செய்தேன். பதிலே இல்லை.''

''நான் பேராசிரியர் வீட்டுக்குப் போயிருந்தேன்... சாமிநாதன் இன்னும் உங்கள் வீட்டில்தான் இருக்கிறாரா?''

''ஆமாம். அவரை வெளியில் விட்டால் உயிருக்கே ஆபத்து வந்துவிடும்.''

முரளி அவருக்கு நன்றி செலுத்தினான். சற்று நேரத்தில் அவன் கிளப்பிலிருந்து கிளம்பிப் 'பாரதமணி' காரியாலயத்தை நோக்கி விரைந்தான். 'பாரதமணி' காரியாலயத்துக்குள் நுழையும் போது காம்பவுண்டு வாசலுக்குப் பக்கத்தில் வேலாயுதன் நிற்பதைக் கண்டதும் காரை நிறுத்தினான்.

''உனக்காகத்தான் காத்திருக்கிறேன்'' என்றான் வேலாயுதன். ''உன்னிடம் ஒரு விஷயம்...'' என்று கூறிவிட்டு மேலே சொல்ல முடியாமல் தயங்கினான். பிறகு சொன்னான்:

''வேலைநிறுத்தம் செய்யப்போய்ச் சில வாரங்களாய்ச் சம்பளம் இல்லை'' என்றான், வருத்தத்துடன்.

''வேலைநிறுத்தம் செய்யத் தூண்டிய தலைவர்களிடம் கேட்பதுதானே?''

''யார் கேட்பது? தலைவர்கள் எல்லோரும் சௌக்கியமாக இருக்கிறார்கள். சங்கடப்படுவது நாங்கள்தான்'' என்றான் வேலாயுதன் வெறுப்புடன். முரளி தன் சட்டைப் பைக்குள்ளிருந்து ஐம்பது ரூபாயை எடுத்து வேலாயுதத்தினுடைய கையில் திணித்தான்.

''இப்போதைக்கு இதை வைத்துக் கொள். மறுபடியும் ரொம்ப முடையாக இருந்தால் வந்து கேள்........'' என்றான்.

வேலாயுதனின் கண்களிலிருந்து நீர் பெருகி, முரளியின் மணிக்கட்டில் விழுந்து சிதறியது.




''ஆண் பிள்ளை அழலாமா?...தைரியமாக இரு. வேறோர் இடத்தில் வேலை தேடித் தருகிறேன். உன் மனைவி எப்படி இருக்கிறாள்? திருந்தி விட்டாளா? அல்லது இன்னமும்...'' என்று கேட்டான் முரளி.

''அவள் ஊதாரித்தனம் இன்னும் அவளை விட்டுப் போகவில்லை. இப்பொழுதும் அவள் சினிமாவுக்குத்தான் போயிருக்கிறாள். புதிய திரைப் படம் ஒன்று இன்று வெளியாகி யிருக்கிறதே'' என்று கூறிவிட்டு அழுகையினூடே பரிதாபமாகச் சிரித்தான், வேலாயுதன்.

''ஏண்டா, நீ ஆண்பிள்ளைதானே? மனைவியை அடக்கி வைக்கத் தெரிய வேண்டாமா?'' என்று எரிந்து விழுந்தான் முரளி.

''இரண்டு மூன்று முறை அடித்தும் விட்டேன். கூப்பாடு போட்டு ஊரைக் கூட்டிவிடுகிறாள். என் மானத்தை வாங்காமல் இருந்தால் சரிதான்'' என்றான் வேலாயுதன், மிக்க வேதனையுடன்.

**ம**றுநாள் காலையில் முரளி, ராஜரத்தினத்தின் வீட்டுக்குச் சென்றபோது சாமிநாதன் தயாராகக் காத்திருந்தான். முரளியும் சாமிநாதனும் கோர்ட்டை

## மார்கழி பஜனை

வழக்கம்போல் இவ்வாண்டும் வரும் மார்கழி மாதம் முழுவதும் திருமயிலை நான்மாட வீதிவலமாய், திரு பாபநாசம் சிவன் தம் கோஷ்டியுடன் காலை 5-30 மணி முதல் ஸன்னிதித் தெருவில் ஆரம்பித்து பஜனை நடத்துவார்.

நோக்கிச் சென்றார்கள். காரில் செல்லும்போதே, சாமிநாதன் முந்தின நாள் நடந்தவற்றைக் கூறினான். பிறகு பைக்குள் கையை விட்டு ஒரு கவரை எடுத்து முரளியிடம் நீட்டினான். இடது கையால் காரைச் செலுத்திக் கொண்டே வலது கையால் கவரைப் பிரித்து உள்ளே இருந்த தாளை எடுத்தான் முரளி. அது ஒரு செக். முரளியின் பெயருக்கு அதில் ஐம்பதினாயிரம் ரூபாய் என்று எழுதப்பட்டிருந்தது. பரபரப்புடன் அதை உற்றுப் பார்த்தான் முரளி. அதில் ராஜரத்தினத்தின் கையெழுத்து இருந்தது. திகைப்புடன் சாமிநாதனைத் திரும்பிப் பார்த்தான்.

''காலையில் இதைக் கொடுத்தார். உங்களிடம் நேரில் கொடுத்தால் நீங்கள் ஒருவேளை வாங்க மறுக்கலாம் என்றுதான் என்மூலமாக...''

''எனக்குப் பணம் தேவை என்று அவருக்கு எப்படித் தெரிந்தது?''—முரளி கேட்டான். அவனுடைய குரலில் கோபம் தொனித்தது.

''மன்னித்துக் கொள்ளுங்கள், சார்! நேற்று இரவு வெகு நேரம் என்னோடு பேசிக் கொண்டிருந்தார். 'பாரதமணி'யைப் பற்றியும் விசாரித்தார். புது மிஷின் வாங்க வேண்டியிருப்பதாயும், அதற்குப் பணம் இல்லாமல் நீங்கள் சிரமப்படுவதாயும் சொன்னேன். வட்டி வேண்டாமாம். உங்களால் எப்போது முடியுமோ அப்போது கொடுத்தால் போதுமாம்.''

''தேவையிருந்தால் எனக்குக் கேட்கத் தெரியாதோ?'' — முரளியின் கோபம் தணியவில்லை.

''பொருளாதார நிலைமையைப் பற்றிக் கேட்டார். நான் சொன்னேன். பணம் தாருங்கள் என்று நான் கேட்கவேயில்லை சார். இன்று காலையில் அவராகத்தான் என்னிடம் கொடுத்து உங்களிடம் சேர்ப்பிக்கச் சொன்னார். அவர் உங்களுடைய நண்பர் என்பதால்தான் பத்திரிகையின் நிலையை அவரிடம் கூறினேன்.'' என்றான், சாமிநாதன், பயத்துடன்.

முரளியின் கண்களில் நீர் சுரந்துவிட்டது. ராஜரத்தினத்தின் பெருந்தன்மையையும், தன்மீது அவர் கொண்டிருக்கும் அக்கறையையும் எண்ணி முரளி நெஞ்சம் நெகிழ்ந்தான். ராஜரத்தினத்தை உடனே பார்க்க வேண்டும் என்னும் துடிப்பு அவனுள் ஏற்பட்டது.

சாமிநாதனை நீதிமன்றத்துக்குள் விட்டு விட்டு வெளியே வந்த முரளியின் கண்களில் 'காலைக் குரலின்' அன்றைய விளம்பரப் போஸ்டர் தென்பட்டது.

''கலியாணமான பருவப் பெண்கள்ளக் காதலனுடன் ஓட்டம்... காளிநாதன் மில்லின் தொழிலாளி மனைவியைத் தேடுகிறார்!''

போஸ்டரைப் படித்து விட்டு முகத்தைச் சுளித்தான் முரளி. செய்தியின் ஆபாசம் உள்ளத்தில் கசந்தது.

நீதிமன்றத்தில் அன்று சாமிநாதன் சாட்சி சொல்லி முடிந்ததும் மாலையில் அவனை அழைத்துச் செல்ல முரளி நீதிமன்றத்துக்கு வந்திருந்தான். சாமிநாதனுக்குப் பாதுகாப்பாக இரண்டு போலீஸ்காரர்களும் வந்திருந்தார்கள். அவர்களையும் ஏற்றிக் கொண்டு கார், 'பாரதமணி' காரியாலயத்தை நோக்கிச் சென்றது. 'பாரதமணி' காரியாலயத்தில் சாமிநாதன் இறங்கியதும் போலீஸார் இருவரும் விடைபெற்றுச் சென்றுவிட்டார்கள். சாமிநாதனைக் காரியாலயத்தில் விட்டு விட்டுக் கிளப்புக்குச் சென்றான் முரளி. ராஜரத்தினம் வழக்கம்போல் தனியாக ஓர் இடத்தில் சாய்வு நாற்காலியில் சாய்ந்தவாறு சிந்தனையில் மூழ்கியிருந்தார். முரளி மிகுந்த பரபரப்புடன் அவரை நெருங்கினான்.

''காலையில் சாமிநாதன் ஒரு செக் கொடுத்தான்.... நான் கேட்கவில்லையே'' என்று கூறிக் கொண்டே பையிலிருந்து செக்கை வெளியே எடுக்க யத்தனித்தான். அவர், அவன் கையைப் பற்றிக் கொண்டார்.

''நோ.... நோ.... வைத்துக் கொள்ளுங்கள். எல்லா விஷயத்தையும் தெரிந்து கொண்டேன். நண்பர்களுக்குள் இந்த மாதிரிக் கூச்சம் ஏன் மிஸ்டர், முரளி...?'' என்றார்.

''நான்.... நான்....'' தயக்கத்தோடு பதில் கூற முயன்றான் முரளி.

(தொடரும்)

# பிலிப்ஸ் TL ப்ளூரஸன்ட் லாம்ப் ஏன் வாங்க வேண்டும்? இதோ 5 சிறந்த காரணங்கள்




1. எல்லா ப்ளூரஸன்ட் லாம்புகளும் வாங்கும் போது பிரகாசமாகவே இருக்கும். ஆனால் உபயோகிக்க உபயோகிக்க அவை ஒளி குன்றிவிடும். உபயோகிக்கும் காலம் முழுவதும் நிறைந்த ஒளி தருபவையே சிறந்த லாம்புகள். பிலிப்ஸ் லாம்புகளில் பிரகாசம் குன்றுவது மிகச் சிறிதளவே. அதோடு ஆரம்பத்திலும் பிலிப்ஸ் லாம்புகள் அதிக ஒளியைத் தருபவை. உதாரணமாக ஒரு 40 வாட் பிலிப்ஸ் லாம்ப் பிரதி வாட்டிற்கு 70 லூமன்களுக்கும் மேலாக ஒளி தருகிறது.

2. ஒரு ப்ளூரஸன்ட் லாம்பின் பிரகாசம் அதிகரிக்க அதிகரிக்க, நிறங்களை மாறுதலின்றிக் காட்டும் அதன் சக்தி குறைந்துவிடும் என்பது விஞ்ஞான ரீதியிலான உண்மை. பிலிப்ஸ் "கூல் டேலைட்" லாம்புகள், சிறந்த ஒளி, நிறங்களை மாறுதலின்றிக் காட்டும் சக்தி இரண்டையுமே பெற்றிருக்கும்படி பிரத்தியேகமாகத் தயாரிக்கப்பட்டவை. அதிகப் பிரகாசமான லாம்ப் தேவையென்றால் பிலிப்ஸின் 'வொயிட் லாம்ப்' வாங்குங்கள்.

3. பிலிப்ஸ் TL ப்ளூரஸன்ட் லாம்புகளினால் ரேடியோ பாதிக்கப்படாது. ஏனெனில் இவற்றை டிசைன் செய்யும் பொழுதே இப்பிரச்சினை தீர்க்கப்பட்டிருக்கிறது. மேலும் பிலிப்ஸ் ஸ்டார்ட்டர்களில் உள்ள ஒரு விசேஷ அமைப்பு எல்லா இரைச்சலையும் சப்தங்களையும் நீக்கி விடுகிறது.

4. பிலிப்ஸ் லாம்புகள் இந்தியாவின் மிகச் சிறந்த, தன்னிறைவு பெற்ற தொழிற்சாலையில், உலகின் உயர்ந்த தரங்களுக்கேற்பத் தயாரிக்கப்படுகின்றன. அவை பெரிய அளவில் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. எனவே அவற்றின் உயர்தரம் உத்திரவாதம் நிறைந்தது"

5. ப்ளூரஸன்ட் லாம்புகளுடன் பிலிப்ஸ் TL ஸ்டார்ட்டர்களையும் சோக்குகளையும் உபயோகித்தால் நீடித்த உழைப்பும் நிறைந்த ஒளியும் பெறலாம்

## பிலிப்ஸ் TL ப்ளூரஸன்ட் லாம்புகள்

**சீரான ஒளிக்கு இவற்றைவிடச் சிறந்தவை கிடையாது**

**பிலிப்ஸ்**




பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்

PHL-6173A

# ஸ்ரீ கிருஷ்ண கான சபா (Regd.) :

'கான விஹார்' கிரிபித் ரோடு, தியாகராய நகர், சென்னை-17
(போன் : 442806 & 441953)

**கிறிஸ்துமஸ் கலை விழா, டிசம்பர் '70 & ஜனவரி '71**

## நாடகம்

டிசம்பர்

- சனி 19உ மாலை 6-45க்கு / ● ஞாயிறு 20 மாலை 6-45க்கு — கோபுவின் 'காசேதான் கடவுளடா' by யூனிடி கிளப் முத்துராமன், மூர்த்தி & மனோரமா நடிக்கும்
- ● செவ்வாய் 22 மாலை 6-45க்கு / புதன் 23 மாலை 6-45க்கு — கல்கியின் 'என் தெய்வம்' by கல்கி பைன் ஆர்ட்ஸ் ஜெய்சங்கர் நடிக்கும்
- வியாழன் 24 மாலை 6-45க்கு / ● வெள்ளி 25 மாலை 6-45க்கு — சோவின் 'என்று தணியும் இந்த சுதந்திர தாகம்' by விவேகா பைன் ஆர்ட்ஸ் கிளப்
- ● ஞாயிறு 27 காலை 10 மணிக்கு — சோவின் முகமத் – பின் – துக்ளக் by விவேகா பைன் ஆர்ட்ஸ் கிளப்
- ● வியாழன் 31 மாலை 6-45க்கு / ஜனவரி வெள்ளி 1உ காலை 10 மணிக்கு — வியட்நாம் சுந்தரத்தின் 'சலனம்' by என்ஜென்ஸ் தியேட்டர்ஸ் மேஜர் சுந்தரராஜன், குமாரி பத்மினி நடிக்கும்
- ஞாயிறு 24 மாலை 6-30க்கு — மௌலியின் 'பிளைட் நெ. 172' by யுனைடெட் அமெச்சூர் ஆர்டிஸ்ட்ஸ்

## சங்கீதம்

டிசம்பர்

- திங்கள் 21உ மாலை 6-15க்கு — சிட்டி பாபு (வீணை), சங்கரன்
- சனி 26 மாலை 6-15க்கு — லால்குடி ஜெயராமன் & ஸ்ரீமதி பிரும்மானந்தம் (இரு வயலின்கள்) பாலக்காடு மணி
- ஞாயிறு 27 மாலை 6 மணிக்கு — புல்லாங்குழல் T. R. மாலி, A. லலிதா, டெல்லி பாலக்காடு மணி
- திங்கள் 28 மாலை 6-15க்கு — M. D. ராமநாதன், லால்குடி, பாலக்காடு மணி உமையாள்புரம் விஸ்வநாதய்யர்
- செவ்வாய் 29 மாலை 6-15க்கு — பாலமுரளி கிருஷ்ணா, பாண்டுரங்க ராஜா ராம் மோஹன் ராவ்
- புதன் 30 மாலை 6-15க்கு — சீர்காழி கோவிந்தராஜன், M. S. கோபாலகிருஷ்ணன், சிவராமன், V. நாகராஜன் பாலக்காடு சுந்தரம், பக்கிரிஸ்வாமி

ஜனவரி

- வெள்ளி 1உ மாலை 6 மணிக்கு — செம்மங்குடி, கிருஷ்ணன், சிவராமன்
- சனி 2 மாலை 6 மணிக்கு — நடனம் : குச்சுபுடி ஆர்ட்ஸ் அகாடெமி அளிக்கும் 'க்ஷீரஸாகர மதனம்' – நாட்டிய நாடகம் by வேம்பட்டி சின்ன சத்யம்
- ஞாயிறு 3 மாலை 6 மணிக்கு — பரதநாட்டியம் by குமாரி ஸ்ரீ வித்யா (Disciple of K. N. தண்டாயுதபாணி) M. L. வசந்தகுமாரி பதங்கள் பாடுவார்
- திங்கள் 4 மாலை 6-30க்கு — ஹரிச்சந்திரா – நாட்டிய நாடகம் by மெலட்டூர் பாகவதமேளா நாட்டிய வித்யா சங்கம்

---

நாடக ஸீஸன் டிக்கட் 5 நாடகங்களுக்கு (● புள்ளியிட்ட 20, 22, 25, 27 & 31தேதிகளில்) ரிஸர்வ்டு ரூ. 15/- ரிஸர்வ் அல்லாத முதல் வகுப்பு ரூ. 10/- தினசரி டிக்கட் ரூ. 15, 10, 5 & 3

சங்கீத ஸீஸன் டிக்கட் 7 கச்சேரிகளுக்கு ரிஸர்வ்டு ரூ. 20/-(பிரம்பு நாற்காலி) ரிஸர்வ் அல்லாத முதல் வகுப்பு ரூ. 10/- தினசரி டிக்கட் ரூ. 15, 10, 5 & 3 நடனம் : தினசரி 15, 10, 5 & 3

வெளியூர் ரஸிகர்கள் முன்னதாக மணியார்டர் மூலம் தொகையை அனுப்பி டிக்கட்டுகளை ரிஸர்வ் செய்து நிகழ்ச்சி தினத்தன்று அல்லது முன்னதாகவோ சபை ஆபீஸிலிருந்து பெற்றுக் கொள்ளலாம். சபை ஆபீஸ் நேரம் : மாலை 6 to 8 p.m. ஞாயிறு காலை : 8 to 10 a.m.

# காதல் தூதுவன்



எஸ். சங்கரலிங்கம்

"நீ அந்தக் கல்யாணத்தை எப்படியாவது தடுத்து நிறுத்திவிட வேண்டும்."

என் ஆபீஸ் முதலாளி என்னிடம் கூறிய கடுமையான சொற்களை நான் பிரயாணம் செய்து கொண்டிருந்த ரயில் வண்டியின் சக்கரங்கள் எதிரொலித்தன. ரயில் வெகு வேகமாகப் போய்க் கொண்டிருந்தது.

அன்று காலை நான் ஆபீசுக்கு வந்ததும் முதலாளி என்னைக் கூப்பிட்டார். "இதோ பார் குருசாமி.... நீ எனக்கு எப்படியாவது இந்த உதவியைச் செய்தாக வேண்டும். அந்தப் பயல் சந்திரனும் என் பெண் ரமாவும் நாளை மறுதினம் பம்பாயில் ரிஜிஸ்தார் விவாகம் செய்து கொள்ளப் போவதாக எனக்குத் தந்தி கொடுத்திருக்கிறாள் என் மகள். அந்தப் பரதேசிப் பயல் சந்திரனுக்கு என் மகளை விவாகம் செய்துவைக்க எனக்குச் சிறிதும் விருப்பம் இல்லை. உனக்கு ரமாவை ஐந்து வருடங்களாகத்தான் தெரியுமே! நீ சொன்னால் நிச்சயம் அவள் கேட்பாள். இந்தக் கல்யாணத்தை எப்படியும் நடக்காமல் செய்துவிடு. இந்த உதவிக்கு நான் உன்னை ஒரு மானேஜராகப் போட்டு விடுகிறேன்" என்று துரிதப்படுத்தி பம்பாய்க்கு முதல் வகுப்பு டிக்கட்டையும் வாங்கி என் கையில் ஐநூறு ரூபாயையும் திணித்தார் முதலாளி.

ரயில் வேகமாக ஓடிக் கொண்டே யிருந்தது. ஹூம்! பார்க்கப் போனால், ரமா—சந்திரனின் காதலுக்கு நான்தான் உடந்தையாக இருந்தேன் என்று சொன்னால் மிகையாகாது.

ரமா என்னிடம் காலில் விழாக் குறையாகக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டதன் பேரில் நான் அவள் இதயத்தை எடுத்துக் கொண்டு அவள் காதலித்த சந்திரனிடம் "காதல் தூது" சென்றேன். அப்போது சந்திரன் கல்லூரியில் பி.ஏ. படித்துக் கொண்டிருந்தான், ஹோட்டலில் ஓர் அறையை வாடகைக்கு எடுத்துக் கொண்டு. என் செய்கை ஒரு வகையில் முதலாளிக்குத் துரோகம் விளைவித்தது என்றாலும் காதலின் குணநலன்களை அனுபவ பூர்வமாக உணர்ந்திருந்த எனக்கு அதற்காக வேண்டிய சேவையைச் செய்யத்தான் தோன்றியது.

காதலர்களைச் சேர்த்து வைத்தவனைக் கொண்டே அவர்களை இப்போது பிரித்து வைலை என்றால், அருந்தா ஓவியங்களை எழுதினவனைக் கொண்டே அவைகளை அழித்து விடு என்று சொல்வதைப்போல் அல்லவா இருக்கிறது?



பம்பாயின் மண்ணை மிதித்தவன் நேரே, முதலாளி கொடுத்த விலாசத்துக்குச் சென்றேன், சந்திரனையும் ரமாவையும் தேடிக் கொண்டு. அது ஒரு பெரிய கட்டிடம். அதன் மூன்றாவது மாடியில்தான் அவர்கள் இருக்க வேண்டும் என்று கீழே இருந்த ஓர் ஆசாமி நான் காண்பித்த சீட்டைப் பார்த்துக் கூறினார்.

'பாம்...பாம்' என்று காரின் ஹாரன் சத்தம் கேட்டது. காரை வேகமாகப் 'பார்க்' செய்து விட்டு அதிலிருந்து இறங்கி என்னை நோக்கி வந்தார், ஒரு பெரியமனிதர்.

"இங்கே சந்திரன் என்று யாராவது ஒரு பையன் தங்கியிருக்கிறானா, ரமா என்கிற பெண்ணோடு...?" என்று அவர் கேட்டதும் நான் ஸ்தம்பித்து விட்டேன்.

"ஏன் சார்? நீங்கள் யார்?" என்று அவரைக் கேட்டேன்.

"சந்திரன் என் பிள்ளை. நான்தான் பிரபல ஹரிராம் டெக்ஸ்டைல்ஸின் சொந்தக்காரன். உயர்ந்த குடும்பத்தில் பிறந்த என் மகன் சந்திரன் யாரோ ஒரு பரதேசிப் பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்ளப் போவதாக எனக்குத் தகவல் கிடைத்தது. இந்தக் கல்யாணத்தை எப்படியாவது தடுத்து நிறுத்தும் உத்தேசத்துடன் வந்திருக்கிறேன்" என்றார் அவர்.

எனக்குச் சந்தோஷம் தாள முடியவில்லை. நான் வந்த காரியம் நிச்சயம் பலித்துவிடும் என்பதில் இனி என்ன சந்தேகம்?

"மேலே மூன்றாவது மாடியில் தங்கியிருக்கிறார்களாம். போய்ப் பாருங்கள். நானும் ஒரு நொடியில் வந்து விடுகிறேன்" என்று வெளியே ஓடினேன்.

என் முதலாளியை 'டிரங்க் டெலிபோனி'ல் கூப்பிட்டேன்.

"சார்! உங்கள் பெண் ரமாவின் கல்யாணத்தை நிறுத்துவது எனக்கொன்றும் சிரமமான காரியமாகப் படவில்லை. ஏனென்றால் சந்திரனின் தகப்பனாரான பிரபல ஹரிராம் டெக்ஸ்டைல்ஸின் அதிபரே இந்தக் கல்யாணத்தைத் தடுத்து நிறுத்த வந்திருக்கிறார்" என்றேன் குதூகலத்துடன்.



''என்ன? பிரபல ஹரிராம் டெக்ஸ்டைல் மில் சொந்தக்காரரின் மகனா சந்திரன்? மிஸ்டர் குருசாமி! நீ முதலில் அவரைத் தடுத்து நிறுத்து! ரமா—சந்திரனின் விவாகம் எப்படியாவது நடக்கும்படி ஏற்பாடு செய்!'' என்று பதில் கூறினர் முதலாளி.

போனில் கேட்ட முதலாளியின் குரல் எனக்குக் காதில் தேன் கொட்டியது போல் இருந்தது.

உடனே மாடிக் கட்டிடத்தை நோக்கி விரைந்தேன். என்னைக் கண்டதும் ரமாவும் சந்திரனும் ஒருவித பிரமிப்பும் இல்லாமல் வரவேற்றனர்.

''மிஸ்டர் சந்திரன்! உங்கள் தந்தை சிறிது நேரத்துக்கு முன் வந்தாரே, பார்த்தீர்களா?''

ரமா 'களுக்'கென்று சிரித்தாள்.

''என்ன நம் விருந்தாளியைக் கேலி செய்கிறாய் ரமா!'' என்று கொஞ்சலாக அதட்டிய சந்திரன் என்னிடம் வந்து என்னைப் பலவந்தமாகச் சோபாவில் உட்கார வைத்தான்.

''மிஸ்டர் குருசாமி! எங்கள் கல்யாணத்தைத் தடுத்து நிறுத்த வேண்டி உங்கள் முதலாளி உங்களை இங்கே அனுப்புகிறார் என்ற செய்தி எனக்கு டிரங்க் டெலிபோனில் கிடைத்தது. அதற்காக வேண்டிக் கீழே குடியிருக்கும் டாக்ஸி டிரைவரைக் கொண்டு கொஞ்ச நேரம் — உம் தலையைக் கண்டதும் — ஹரிராம் டெக்ஸ்டைல்ஸ் அதிபராக மாறி நாடகமாடச் சொன்னேன். விஷயத்தை நீர் உங்கள் முதலாளிக்குச் சொல்ல, அவர் எங்கள் விவாகத்தை உடனே அநுமதிப்பார் என்பது தெரியும்'' என்றான் சந்திரன்.

''ஐயோ! என் உத்தியோகம்?'' என்றேன்.

''பயப்படாதீர்கள்! ஹரிராம் டெக்ஸ்டைல்ஸ் மூன்று நாளைக்கு முன்புதான் இவாலாகி அந்த ஏக்கத்தில் அதன் அதிபரும் மாரடைப்பால் திடீரென்று நேற்றுக் காலமாகி விட்டார்! அவர் பிரம்மச்சாரி. உங்கள் முதலாளியிடம் சாக்குச் சொல்ல வேறு உபாயம் சொல்லித் தருகிறோம், வாருங்கள்!'' என்றான் சந்திரன். பிறகு திருமணத்தை நான்தான் முன்னின்று நடத்தி வைத்தேன் என்பதைச் சொல்லவும் வேண்டுமா?

## — — — படித்துப்பாருங்கள் — — —

### ஜி. சுப்பிரமணிய அய்யர் (ஆங்கிலம்)

திருவாரூர் முத்துஸ்வாமி அய்யருக்கு நீதிபதி பதவி அளிக்கப்பட்டபோது 'ஓர் இந்தியருக்கா இந்தக் கௌரவமான பதவி?' என்று சில வெள்ளைக்காரப் பத்திரிகைகள் பொருமின. இதைக் கண்ட ஜி. சுப்பிரமணிய அய்யர் தம் சகாக்கள் மு. வீரராகவாச்சாரியார், டி. டி. ரங்காச்சாரியார், கேசவ ராவ் பந்த், என். சுப்பாராவ் பந்துலு ஆகியவர்களுடன் சேர்ந்து ஒன்றே முக்கால் ரூபாய் கடன் வாங்கி ஒரு பத்திரிகை தயாரித்து அதில் முத்துசாமி அய்யர் நியமனத்தை ஆதரித்தும், வெள்ளையர் மனப் போக்கைக் கண்டித்தும் எழுதி 80 பிரதிகள் அச்சிட்டார்.

வாரம் ஒரு பத்திரிகையாக ஆரம்பித்துப் பின்னர் வாரம் மூன்று முறை வெளிவந்து 1889ல் தினசரியாக வெளிவந்தது. நெ. 100, மவுண்டு ரோடு கட்டிடத்தில் ஹிந்து அமைக்கப்பட்டு அச்சிட மிகவும் உதவியாக இருந்தவர் சர் எஸ். சுப்பிரமணிய அய்யர் (பின்னர் நீதிபதியானவர்.)

மகாஜன சபை ஜி. சுப்பிரமணிய அய்யரால் தொடங்கப்பட்டு, அதன் காரியாலயம் 'ஹிந்து' காரியாலயத்திலேயே செயல்பட்டதால் 'சதிகாரர்களின் குகை' என்று வெள்ளைக்காரர்கள் சிலர் இதை வருணித்திருக்கிறார்கள்.



நியாயத்தை எடுத்துச் சொல்லப் பத்திரிகை தயங்கியதில்லை. வெள்ளைக்கார அதிகாரிகள் நல்லது செய்திருந்தால் அதை அப்பத்திரிகை பாராட்டத் தவறியதில்லை. தவறு செய்தால் தீவிரமாகக் கண்டிக்கவும் தவறியதில்லை.

அக்காலத்தில் பத்திரிகை படிப்பவர் மிகவும் குறைவு. ஒரு கூட்டத்தில் பெரும் தலைவர் பேசுகிறார் என்றால் அதற்குக் கூட்டம் கூட நிறைய வராது. அப்படி இருந்த ஒரு சமூகத்தைத் தட்டி எழுப்பிய பெருமையில், பெரும் பங்கு ஜி. சுப்பிரமணிய அய்யரைச் சேரும்.

தமிழ் நாட்டில் பத்திரிகைத் துறையின் ஆரம்ப காலம் எத்தனை கஷ்ட நஷ்டங்களுக்கு இடையில் தடுமாறினாலும் எப்படி உறுதியோடு வளர்ந்தது என்பதையும் ஸ்ரீ ஜி. சுப்பிரமணிய அய்யர் அவர்களின் தனிப்பட்ட சிறப்பியல்புகளையும் அறிய உதவுகிறது இச்சிறு நூல். 'நவீன இந்தியாவின் சிற்பிகள்' என்கிற வரிசையில் இந்தப் புத்தகம் இந்திய அரசினால் பிரசுரிக்கப்பட்டுள்ளது. —''ரஜன்''

**ஆசிரியர் : ஸ்ரீ எஸ். ஏ. கோவிந்தராஜன்.**

**விலை : ரூ. 2.00.**

☞ கிடைக்குமிடம் : **Publications Division, Patiala House, New Delhi-1**; சென்னையில், சாஸ்திரி பவன், 35, ஹாடோஸ் ரோடு, சென்னை-6




நாள் ஒன்றுக்கு நீங்கள் சேமிக்கும்
ஒவ்வொரு 25 பைசாவும்
ஐந்து ஆண்டுகள் முடிந்தவுடன்

**525/-** ரூபாயாக

பெருகி வளர்கிறது எங்களது

# மினி-டிபாஸிட் கணக்கில்.

*இன்றே ஆரம்பியுங்கள் ஒரு மினி-டிபாஸிட் கணக்கு.*

மற்ற விபரங்களுக்கு எங்கள் கிளைகளில் ஏதேனும் ஒன்றுடன் தொடர்பு கொள்ளவும்.



## தஞ்சாவூர் பர்மனெண்ட் பாங்க் லிமிடெட்

பதிவு அலுவலகம்: 1087, மிஷன் தெரு, தஞ்சாவூர்

D. லெக்ஷ்மிநாரரயண் —— B. K. மாதவன்
சேர்மன் செகரட்டரி

---



# உங்கள் மார்பு, சுவாசப்பை மற்றும் தொண்டை ஆரோக்கியமாக விளங்க சாப்பிடுங்கள்

## ஜெ:ப்ஸ் மாத்திரைகள்

இம் மாத்திரைகள் உங்கள் மார்பையும், சுவாசப் பையையும் சுத்தப்படுத்துகின்றன; தொண்டைக்கு இதமளிக்கின்றன; ஜல-தோஷம், இருமல், மார்ச்சளி நோய் மற்றும் தொண்டைக் கோளாறுகளுக்கு நிவாரண மளிக்கின்றன. அடிநா அழற்சி (டான்ஸில்-லைடிஸ்), அடித்தொண்டை அழற்சி (ஃபரிங்கி-டிஸ்), கரகரப்பான தொண்டை முதலிய-வற்றுக்கு இம்மாத்திரைகள் சிபாரிசு செய்யப்படுகின்றன.

ஜெ:ப்ஸ் மாத்திரையை வாயில் அடக்குங்கள் ஆனந்தமாக மூச்சு விடுங்கள்.

10 மாத்திரைகள் கொண்ட ஸ்ட்ரிப் பாக்கிங்கில் கிடைக்கின்றன.

ஜண்டு
பார்மசியூட்டிகல்
ஒர்க்ஸ் லிட்.
கோகலே ரோடு தெற்கு,
பம்பாய்-25 DD.



# கீழ் வானத்துச்

நாவின் உதயம் மிக அழகாய்ப் புலர்ந்தது. ஜன்னல் வழியே கீழ் வானின் செவ்வொளி, தோட்டத்துப் பசு மரங்களின் வழியே வெகு தொலைவில் தெரிகிறது.

படுக்கையில் நிமிர்ந்து சாய்ந்தபடி கோபாலசுவாமி வியக்கேயே பார்க்கிறார். இதுவரை காணாத புதுமையாய் இருக்கிறது. எத்தனையோ நாட்களில் வானில் மேக மூட்டம் கவியாத உதய நேரங்களில் வருகிற காட்சிதான். அவர் மாடியின் இதே முகப்பு அறையில்தான் தினமும் படுத்துத் தூங்குகிறார். ஆனால் எப்போதாவது தற்செயலாய்த்தான் இந்த மாதிரிக் காட்சி அவரது பார்வையில் தட்டுப்படும். முகத்தை உடனே திருப்பிக் கொண்டு இன்னும் கொஞ்ச நேரம் தூங்கலாம் என்று இமைகளை மூடிக் கொள்வார்.

அவருக்காகக் காத்திருக்காத — யாருக்காகவுமே காத்திருக்காத — அந்தக் காட்சியை அதோடு விட்டுவிடுவார்.

இன்றோ அவரது பார்வை அந்த உதயத்திலேயே ஓடிப் பதிந்தது.

செம்மை படிப்படியாக மாறிக் கொண்டிருந்தது.

கோபாலசுவாமி பார்த்துக் கொண்டே இருந்தார். அதில் ஏதோ புதிய செய்தி—தமக்காக மட்டுமே சொல்லப்படும் ஓர் அற்புதச் செய்தி — புதைந்திருப்பது போல் தோன்றியது. முதல் முறையாகப் பெரும் அதிசய உணர்வோடு, அதைத் தெரிந்து கொள்ள விழைந்தார் அவர்.

அவர் பிடிவாதமாய் மனத்தை ஒருமுகப் படுத்தலானார். மனமோ அவரை எங்கெல்லாமோ முதலில் இழுத்து அலைக்கழித்தது.

ஹாலில் நடக்கும் ஏகாதசிப் பஜனை, ராம நவமி உற்சவம், ஆடி வெள்ளிக்கிழமைகளில் அவர் பெயரால் கோவில் மண்டகப்படி…

எல்லாரும் அவருடைய தர்ம சிந்தனையைப் பற்றிச் சொல்வார்களே!

வியாபாரத்தில் பணமாய் வந்து கொட்டியது. பத்தே வருஷங்களில் வாழ்வின் பரிபூரண வசதிகள், பெயர், புகழ்…

ம்… வியாபாரம்!

இந்த நல்ல பெயர்கூட ஒருவகை வியாபாரம்தான். பணத்தை அள்ளி அள்ளி விட்டுப் பெயர் வாங்கி விட்டார். கொடை ஒரு



கவசம் போல் அவர் மீது மூடிக் கொண்டது. கவசமா? அல்லது காலப் போக்கில் படிந்த தூசியா?

தூசிப் பூச்சுத்தான் என்று இப்பொழுது— இந்த உதய வேளையில் தொலைவிலிருந்து வந்து எட்டிப் பார்க்கும் வெம்மையே இல்லாத இனிமையான வெளிச்சத்தில் தெரிகிறது. அவர் தம்மீதே கொஞ்சம் வெறுப்புக் கொண்டார். தம் போக்கில் — இந்த வாழ்க்கையில் ஏதோ மாறுதல் வேண்டும் என்று தோன்றியது.

புதிய அர்த்தம் ஒன்றை அவர் உணர ஆரம்பித்தார். வாழ்க்கையின் அர்த்தம் என்று ஒன்று இருப்பதாக இப்பொழுது தோன்ற ஆரம்பித்தது. அவசரம் அவசரமாகப் பழைய நாட்களுக்கு ஓடிப் போய் விடமாட்டோமா என்று ஏங்க ஆரம்பித்தார் அவர். நகரின் வசதியற்ற ஏதோ ஒரு பகுதியின் சாதாரணப் பழைய வீட்டில் ஒண்டிக் கொண்டு அவர் வாழ்வைத் தொடங்கிய அந்த நாட்களில்—

வெள்ளிக் கிழமைகள், வேலைக்குப் போகும் பரபரப்பு. அறை மூலையில் சுவாமி படத்துக்கு எதிரில் சுடர் விடும் குத்துவிளக்கு...

வாழ்க்கைப் பற்றுக்குறைக்குள் அகப்பட்டுத் தவித்த நாட்கள் அவை. ஆனால் விநாடி நேரம் அந்த விளக்கொளியில் அவர் மனம்

# செம்மை

கு. வேங்கடரமணி.




சலனங்களை ஒதுக்கிவிட்டுப் பரவசத்தில் நிரம்பித் ததும்பும்....

வெளித் தாழ்வாரத்தில் யாரோ வேகமாய் நடந்து வரும் காலடிகளின் அதிர்வு அவரை உலுக்கிற்று.

''அப்பா!''

''ம்....''

கோபாலசுவாமி முனகிக்கொண்டே திரும்பினார். அவர் மகன் வெளியே செல்லும் திட்டத்தோடு உடை அணிந்து உற்சாகமாய் வந்து நின்றான். நிச்சயமாய் இது வெளியூர்ப் பிரயாணமாய்த்தான் இருக்கும். உள்ளூரிலேயே ஊரைச் சுற்ற இவ்வளவு சீக்கிரம் புறப்பட்டிருக்க மாட்டான். சிரத்தையாய் அவரிடம் சொல்லிக் கொண்டு போகவும் வந்திருக்க மாட்டான்.

நகர எல்லைக்குள் மகன் எங்கெல்லாம் போவான், யாரோடு சேர்ந்து கொண்டு என்னவெல்லாம் செய்வான் என்பது அவருக்கு நன்றாய்த் தெரியும். ஆனால் மகன் அப்பாவுக்கு எதுவுமே தெரியாது என்றுதான் நினைத்தான்; அல்லது நடித்தான். கோபாலசுவாமியும் தெரிந்தும் தெரியாதவராகத்தான் பழகினார்; நடந்து கொண்டார். அவரும் நடித்தார்.

''அப்பா!''

''ம்....சொல்லு...''

''உங்களோட கார் வேணும்...''

''எதுக்கு?''

''என் சிநேகிதன் கல்யாணம் திருச்சியிலே. அதுக்கு நான் கட்டாயம் போகணும்.''

இரண்டாவது கார் கொஞ்சம் பழையது. ஒரு வாரமாய் ஓடாமல் நின்றுவிட்டது. அதனால் இப்போது அவருடைய சொந்த உப

போகத்துக்கு மட்டுமே வைத்திருக்கிற வண்டியைக் கேட்கிறான் மகன்.

திருச்சிக்குப் போகிறானாம். பங்களூருக்கே போனாலும் போவான்.

கோபாலஸ்வாமி அவனுடைய முகத்தையே உற்று நோக்கினார். நான்கு வயது வரை அவர் தூக்கி வைத்துக் கொண்டு கொஞ்சி மகிழ்ந்த பழைய ஏழைக் கோபாலஸ்வாமியின் மகனின் குழந்தை முகத்தை அதில் தேடினார். ஆனால் இந்த முகம் பிடிவாதமும் முரட்டுத்தனமும் நிறைந்ததாய் இருந்தது.

அவர் மனமும் அதில் ஒரு நிலைப்பாடு அழுத்தமாகிக் கெட்டிப்படத் தொடங்கியது.

''உம்... போய்த் தொலை!'' என்று சுவாரசியமற்றுப் போன குரலில் அனுமதி வழங்கி விட்டுக் கண்களை மூடிக் கொண்டார்.

படபடப்பான காலடி ஓசை அறையை விட்டு வெளியேறியது. அவசரமாய் மகனைக் கூப்பிட்டு, 'இந்த ஒரு தடவைதான். இனிமேல் உனக்கு இதுபோல் ஊர் சுற்றக் கார் கிடைக்கும் என்று எதிர்பார்க்காதே' என்று முடிவாய்ச் சொல்லி விடலாமா என்ற எண்ணம் தோன்றியது.

எதற்காகச் சொல்ல வேண்டும்? நாளைப் பொழுதுக்குள் அவர் அந்தக் காரை விற்று விடப் போகிறார். இதோ அந்த மாதிரி அவர் தீர்மானம் செய்து விட்டார். நேரம் வரும் போது சொல்லாமலே புரிந்து கொள்ளட்டுமே! முதல் சில விநாடிகள் அதிர்ச்சியாய் இருக்கும். பிறகு கொஞ்ச நாட்கள் ஏமாற்றமாய் இருக்கலாம். பின்பு பழக்கமாகப் போய் விடாதா?

எல்லாவற்றையும் மறந்துவிட வேண்டும். அழித்துத் துடைத்து உதறிவிட வேண்டும். இனிமேல் புதிய கோபாலஸ்வாமி. அவர் முடிவு செய்து விட்டார். பரபரப்பு, மனத் தவிப்பு எல்லாம் விலகிப் போன வாழ்க்கை — அதை அவர் அடையத்தான் வேண்டும்.

தம்மை அமைதிப்படுத்திக் கொள்ளும் நெட்டுயிர்ப்புடன் அவர் மூடிய கண்களுடனே சாய்ந்து கொண்டார். உள்ளம் ஆர்வம் மேலிட, 'பச்'சென வேர் விட்டிருந்த அந்த உதய தரிசனக் காட்சியை எண்ணி ஏங்கியது. பரவசமான அந்த உணர்ச்சி நன்றாக ஞாபகம் இருக்கிறது.

கடிகாரம் சிங்காரமாய்க் காலக் கணக்கின் ஓர் அளவை முழங்கிற்று.

மணி எட்டு. நேரம் போகிறதே தெரியவில்லையே ! சாதாரண நாட்களில் அவர் இதற்குள் காலத்தோடு போட்டி போட்டுக் கொண்டு எத்தனை காரியங்களில் ஈடுபட்டிருப்பார் !

டக், டக், டக்... என்ற காலடிச் சத்தம்.

மெள்ள இமைகள் பிரிகின்றன.

''நமஸ்காரம் !''

''வாங்க டாக்டர் !''

அருகில் வந்து நின்று ஆழ்ந்து முகத்தைப் பார்க்கிறார் டாக்டர்.

''உங்க மனைவி போன் பண்ணினாங்க....'' டாக்டர் நாடியைப் பற்றிப் பார்த்து விட்டு இதயத் துடிப்பையும் பரிசோதிக்க ஆரம்பித்தார்.

மனைவி அழைத்தாளாமே! ஏன்?

பங்கஜம் அவரை எப்போது வந்து பார்த்தாள்? தனக்கு உடம்பு சரியில்லை என்று அவளிடம் அவர் எப்போது சொன்னார்? கண் விழித்தது முதல் பங்கஜத்தைப் பார்த்ததாகவே அவருக்கு ஞாபகம் வரவில்லை. சமையற்காரன் காலை ஆகாரம் கொண்டு வந்த போது அதைத் திருப்பிவிட்ட ஞாபகம் மட்டும் வருகிறது.

எதிரே டாக்டரைத் தொடர்ந்து வந்த வேலைக்காரன் நின்றான்.

''அம்மா எங்கே?'' என்று விசாரித்தார் கோபாலசாமி.

''விமானத்திலே வெளிநாட்டுக்கு ஒரு நடன கோஷ்டி போகிறதாம். அவங்களை வழியனுப்பப் போனாங்க. விமானம் புறப்பட்டதும் வந்து விடுகிறதாய்ச் சொன்னாங்க....''

''சரி, சரி.'' அந்தப் பேச்சை அதோடு விட்டு விட்டார் கோபாலசாமி.

பங்கஜம் எத்தனையோ சங்கங்களிலே முக்கியமான பங்கு கொண்டிருக்கிறாள். அதிலே இந்த நாட்டியக் கோஷ்டியைச் சேர்ந்தவர்களும் இருக்கலாம். நகரில் அவளுக்கு ஓர் அந்தஸ்து, பெயர் எல்லாம் இருக்கின்றன. அவற்றை அவள் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். ஸ்ரீமதி கோபாலசுவாமிக்கு இன்று அவ்வளவு முக்கியத்துவம்; மதிப்பு.

முன்பு ஒரு நாள் — கால் நூற்றாண்டுக் காலத்துக்கு முன்னால் ஒரு தடவை—கோபாலசுவாமி கடுமையான காய்ச்சலில் படுத்து விட்டார். அந்த இரண்டு மாத காலமும் இப்பொழுது அவருக்கு ஞாபகம் வந்தது. சாதாரணமான டாக்டரிடம்கூட வைத்தியம் செய்து கொள்ள வசதியில்லாத காலம் அது. அவர் மனைவிதான் வேளை தவறாமல் சர்க்கார் ஆஸ்பத்திரிக்குப் போய் மருந்து வாங்கி வருவாள். ஒவ்வொரு வேளை மருந்தையும் அவள் காலம் தவறாமல் அவரைக் குடிக்க வைத்ததும், கஞ்சியைக் கெஞ்சிக் கொஞ்சிச் சாப்பிடச் சொன்னதும் அந்த முற்பகுதி வாழ்வின் மறக்க முடியாத சம்பவங்கள்; இன்றைய வாழ்வின் ஏக்கங்கள் ! ஆ! வாழ்வில் உண்மையும் அழுத்தமும் நிறைந்த நாட்கள் அவை. அன்பின் நெருக்கத்தில் இளைத்துத் இளைத்து, மரணப் பிடிப்பிலிருந்து விடுபட்டுப் பங்கஜத்தின் கணவராய் மீண்டு வந்த நாட்கள்.

அதே பங்கஜந்தான் ! இன்னும் கொஞ்ச நேரத்தில் வரப் போகிறாள். படுக்கை அருகே நின்று அவருடைய உடல் நிலையைப் பற்றி விசாரிக்க அவளுக்குச் சில நிமிடங்கள் அவகாசம் கிட்டலாம். பிறகு ஏதாவது போட்டி, வரவேற்பு, மாதர் சங்கப் பணி..... அதற்கு மேல் ஓய்வு இருக்காது அவளுக்கு.

''சாதாரணமாகத்தானே இருக்கிறீர்கள்!'' என்றார் டாக்டர் தம் சோதனைகளின் முடிவில்.

''நானும் அப்படித்தான் நினைக்கிறேன், டாக்டர் ! பங்கஜம் என்னைக் கேட்காமலே உங்களை அழைத்து விட்டாள்.''

''அதனாலென்ன ? இப்பொழுது உங்களுக்கு மனம் சோர்ந்து போயிருந்தால்

# எழில் மிகு 'பாலே'!

''பாலே'' நடன சம்பிரதாயத்தில் இருவர் மட்டுமே ஆடுவது ஒரு புதுமை என்றே சொல்லலாம். இதில் வெற்றி காண வேண்டுமானால் நடனமாடுவோர் அசாதாரணத் திறமையும், மிகக் கடுமையான பயிற்சிக்குப் பின்னரே அடையக்கூடிய ஆடல் வகைகளில் ஏறக்குறைய பூரணத்துவமும் உள்ளவர்களாக இருத்தல் வேண்டும். பெலிண்டா—பெல்லோ 'பாலே' நடனங்கள் இவ்வகையில் மிக உயர்வாக இருந்தன.

சென்ற நவம்பர் 19, 20 இரு நாட்களிலும் சென்னை மியூசிக் அகாடெமி அரங்கில் இவர்கள் நிகழ்ச்சி நடைபெற்றது.

பாலே நடனங்களில், விரல் நுனி நடனம், கட்டை விரலில் நின்றபடியே வேகமாகச் சுற்றுவது, விரல் நுனியில் நின்ற நிலையிலேயே சுழலுவது, எம்பிக் குதிப்பது அப்படியே அரங்கத்தில் ஒரு கோடியிலிருந்து மறு கோடிக்கு நழுவிச் செல்லுதல், தாவுதல் — இப்படிப் பல அம்சங்களைக் காணலாம். இவைதாம் இந்நடன வகைக்கே சிறப்பளிப்பவை. அன்னப் பறவை தண்ணீரில் மிதந்து செல்லுவது போலும், வானத்திலிருந்து கீழே இறங்குவது போலும், உணர்ச்சிகளை அநாயாசமாக பாலே நடனங்கள் உண்டாக்கும். இச்சிறப்புக்களை எல்லாம் பெல்லோ — பெலிண்டா நடனங்களில் முழுமையாகக் கண் குளிரக் காண முடிந்தது.

இந்த ஜோடி, தங்கள் நிகழ்ச்சியில், 'ரோமியோ ஜூலியட்'', ''உறங்கும் அழகி'', ''நட்க்ராக்கர்'' (Nutcracker), ''கைஸெல்'' (Giselle) ஆகிய நாடகங்களிலிருந்து ரசபாவம் மிகுந்த சில பகுதிகளையும் காட்சிகளையும் மட்டுமே பொறுக்கி எடுத்துக்கொண்டனர். அவற்றை அழகாகவும், திறமையுடனும் ஆடினர்.



இந்திய — ஆங்கிலேய கலாச்சார உறவை வளர்க்கும் நோக்கத்துடன் சென்னை பிரிட்டிஷ் கௌன்ஸில் ஆங்கிலேய மாதர் சங்கத்தின் ஒத்துழைப்புடன் இந்நிகழ்ச்சியை ஏற்பாடு செய்திருந்தது.

எம். எஸ். சிவஸ்வாமி

---

இரண்டு நாட்களுக்கு ஓய்வு எடுத்துக் கொள்ளுங்களேன்.''

ஆலோசனையை வழங்கிவிட்டு டாக்டர் போய் விட்டார்.

மீண்டும் தனிமை.

மீண்டும் காலடி ஓசை கேட்கிறது.

''சார் !''

அசதியைக் கலைத்து விட்டுத் திரும்பினார் கோபாலகவாமி.

அவருடைய அந்தரங்க — வியாபாரத்தில் அவருடைய நெளிவு - சுளிவுகளுக்கெல்லாம் துணையாக நிற்கும் — துணை ; செயலாளர்.

'' என்னப்பா ?''

''ரொம்ப சீரியஸான சேதி.''

''சொல்லு.''

''அந்த நபர் — கடத்தல்காரன் — சுங்க இலாகாவின் கைகளுக்குள் போய்விட்டான். கெட்டிக்காரன், பெரிய சான்ஸ் என்று இருபது லட்சம் நம்பிக் கொடுத்தோமே எல்லாம் போச்சு. ஒரு பைசா சரக்கு இனிமேல் வராது —''

''ம்.....''

''நம் பெயரை வெளியில் சொல்லாமல் இருந்தால் போதும்.''

மீண்டும் 'ம்...' என்ற குரல். கோபாலசுவாமியின் உணர்வுகள் உறைகின்றன.

''அப்புறம்.....''

''சொல்லு.''

''நம்மிடம் இருந்த சரக்குகளை முழுதும் அப்புறப்படுத்தி விட்டேன்.''

''சரி.''

வந்தவர் எழுந்து, ''கவலைப்படாதீங்க, பார்க்கலாம்'' என்ற பொழுது கோபாலசுவாமி உள்ளுக்குள் வேதனையோடு சிரித்தார். 'இனிமேல் என்ன இருக்கிறது பார்க்கிறதுக்கு ?''

மேலும் சில விநாடிகள் கழிந்ததும் அவர் டெலிபோன் மணியோசையைக் கேட்டுத் திடுக்கிட்டார். படுக்கையை விட்டுக் கீழிறங்கிக் கால்கள் பின்ன அடுத்த அறைக்குச் சென்று போனை எடுத்தார்.

மறுபடியும் மோசமான செய்திகள் கிடைத்தன. பங்கு மார்க்கெட்டில் பலத்த அடி, கைக்கு எட்டும் போலிருந்த ஓர் ஒப்பந்தம் முறிவு. அங்கேயே சோபாவில் நிலை கொள்ளாமல் சாய்ந்தார் அவர். இன்னும் பங்கஜம் வரவில்லை. எப்போது வரப் போகிறாளோ ?

அவள் வந்த போது, அந்தப் பழகிப் போன காலடி ஓசைகளால் உடனே அவள்தான் என்று புரிந்து கொள்ளக் கூடிய அவர், அவள் வரவை உணர முடியாத மயக்கத்தில் இருந்தார்.

''என்னங்க, என்னங்க ?'' என்று பங்கஜம் உலுக்கி எழுப்பியதும் பாதிக் கண்களைத் திறந்து பார்த்தார்.

''பங்கஜம்.''






திருமதி லட்சுமி கணபதி




தயாரிக்க உதவுவது

# பிரவுன் & போல்ஸன்

பேடெண்ட் கார்ன்ஃப்ளவர்



**பக்குவ முறை:**

1-1½ கோப்பை சர்க்கரை

½ கோப்பை **பிரவுன் & போல்ஸன்** பேடெண்ட் கார்ன்ஃப்ளவர்

½ கோப்பை நெய்

2 டேபிள் ஸ்பூன் **ரெக்ஸ்** ரோஸ் சிரப்புத்

1 டேபிள் ஸ்பூன்—நல்ல முந்திரிப் பருப்பு மற்றும் பாதாம் (நறுக்கப்பட்டவை)

1. 1 கோப்பை தண்ணீரில் சர்க்கரையைக் கலந்து, 5 நிமிடங்கள் வரை கொதிக்க வைக்கவும்.

2. ½ கோப்பை குளிர்ந்த நீரில் **பிரவுன் & போல்ஸன்** பேடெண்ட் கார்ன்ஃப்ளவரைக் கலந்து கூழ்போல் ஆக்கி, அடுப்பின் சூட்டைத் தணித்து, கூழை மெதுவாக சர்க்கரைப் பாகுடன் சேர்க்கவும்.

3. கார்ன்ஃப்ளவர் நன்றாக சமைக்கப்பட்டதும், சிறிது சிறிதாக நெய்யை சேர்க்கவும். இக்கலவை பாத்திரங்களின் பக்கங்களுக்கு ஒட்டாமலும், நெய் பிரியும் வரையிலும் கிளறிக்கொண்டே இருக்கவும்.

4. பின்னர் **ரெக்ஸ்** ரோஸ் சர்ப்பத் சேர்த்து, நன்றாகக் கலக்கவும். கலவை இளகலாகி, பாத்திரத்தின் பக்கங்களை ஒட்டாமல் நன்றாகப் பிரிந்ததும், முந்திரி பாதாம் பருப்புகளைக் கலந்து, நெய் தடவிய தட்டுகளில் பரப்பவும்.

5. குளிர்ந்ததும், மூலைவாட்டாக வெட்டவும்.

**பிரவுன் & போல்ஸன்** பேடெண்ட் கார்ன்ஃப்ளவர் சமோசா, பட்டீஸ் ஆகியவற்றை அதிமெல்லியதாகவும் மொரமொரப்பாகவும் ஆக்குகின்றது. (இரண்டு கோப்பை சாதா மாவுக்கு 1 டேபிள் ஸ்பூன் போதுமானது). குழைவான சுவைமிகு சூப், கிரேவி ஆகியவற்றைக் கெட்டியாகத் தயாரிக்க உதவும். **பிரவுன் & போல்ஸன்** கார்ன்ஃப்ளவர் இளங்குழந்தைகள், நோயாளிகள் ஆகியோருக்குத் தெம்பு தரவும் ஆரோக்கிய மூட்டவும் சிறந்தது. இது அருமையான பொருள்களிலிருந்து மிகுந்த கவனத்துடன் பக்குவப் படுத்தப் பட்டதால், கார்ன்ஃப்ளவர்களில் மிகவும் சிறந்தது.

உங்கள் வசதியை முன்னிட்டு 440 கிராம் டப்பாக்களிலும் கிடைக்கிறது.




இலவசம்! புதிய பக்குவ முறை நூல் நெ. 3. இன்றே ஒரு பிரதிக்கு எழுதுங்கள்.
தயவு செய்து எனக்கு ஒரு பக்குவ முறை செட்டை ஆங்கிலம் / இந்தி / வங்காளி / தமிழ்/தெலுங்கு/மலையாளம்/ குஜராத்தி/ மராத்தி/ கன்னட மொழியில் இலவசமாக அனுப்ப வேண்டுகிறேன்.

பெயர்.........................................................................

முகவரி.........................................................................

இக் கூப்பனைப் பூர்த்தி செய்து அனுப்புக: பப்ளிஸிடி டிபார்ட்மெண்ட், கார்ன் ப்ராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா) பிரை. லிட். ஸ்ரீநிவாஸ் ஹவுஸ், வாட்பி ரோடு, பம்பாய்-1. (பி.ஆர்). K-2

இதுபோல் இன்னும் பலவகையான தின்பண்டங்களைத் தயார் செய்து உங்கள் குடும்பத்தினரை மகிழ்விக்கலாம். பின்வரும் இதழ்களைக் கவனித்து வாருங்கள்



**கார்ன் ப்ராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிட்.,**
ஸ்ரீநிவாஸ் ஹவுஸ், வாட்பி ரோடு, பம்பாய்—1. (பி.ஆர்).

ஏகபோக விற்பனை ஏஜெண்டுகள்: பாரி & கம்பெனி, டேர் ஹவுஸ், சென்னை-1. மற்றும் அவர்களது கிளைகள்.

Bensons/5235 TM

"என்னங்க செய்யுது? டாக்டரை அழைக்கட்டுமா ?"

"ஊஹூம். வேண்டாம்!" அவள் முகத்தையே பார்த்தார். 'இந்த வைரங்கள், தங்கம் — இன்னும் இதைப் போல் மூன்று மடங்கு அவள் உள்ளே வைத்திருக்கும் நகைகள்.... பங்கஜம் நீ எல்லாவற்றையும் இழக்கத் தயாரா?' நினைப்பு ஓடியது.

"பங்கஜம் ! உனக்கு இப்போ வேறே வேலே ஏதுவும் இல்லேன்னு, இங்கேயே என் பக்கத்திலேயே இரேன். டாக்டர் வரவேண்டாம். நீ... நீ...."

மறுபடியும் மயக்கம் வந்தது.

"அப்பா ! அப்பா !"

கண்ணன் வந்து விட்டானு ?

அவர் கண்களைத் திறக்காமலே பங்கஜத்தின் மடியில் தலை வைத்துப் படுத்திருக்கிறார்.

"சத்தம் போடாதேடா ! அப்பா களைப்பாய் இருக்கிறார்."

"இல்லேம்மா! ஒரு விபத்து. நம்ம கார் நொறுங்கிப் போச்சு. பின்னாலே வந்து ஒரு லாரி மோதி. நான் நல்ல காலமாய் உயிர் தப்பிப் பிழைச்சேன்."

"ஐயோ ! கண்ணு !"

இந்தப் பேச்சு கோபாலசுவாமியின் காதுகளில் விழுகிறது. மிக மெதுவாய், தொலை தூரத்திலிருந்து கேட்கும் குரலாய்.

நீண்ட நேரம் கழித்து, அவர் உணர்வு பெற்ற போது, பங்கஜம் அவர் வாயில் கொஞ்சம் கொஞ்சமாய் ஏதோ கொடுத்துக் குடிக்க வைத்தாள். இதமாய், குளிராய் இருந்தது.

"என்னை என் அறையிலே கொண்டு படுக்க வைச்சுடு."

மகனும், மனைவியும் ஆளுக்கு ஒரு பக்கமாய்ப் பிடித்து அழைத்துக் கொண்டு போனார்கள். சௌகரியமாய்ப் படுக்க வைத்தார்கள். அவர் இருவர் முகத்தையும் மாறி மாறிப் பார்த்தார்.

"பங்கஜம்!"

"போனும் போவுது. விடுங்க. நீங்க கவலைப்படாமல் இருங்க. அது போதும்."

"நிஜம்மாவா சொல்றே, பங்கஜம் ?"

அவர் கையை மெதுவாய், ஆனால் நம்பிக்கை நிரம்பப் பற்றினள் அவள்.

"அப்பா ! நான் இருக்கேன், அப்பா ! இனி மேல் பழைய கண்ணன் இல்லேப்பா நான்." மகனின் கலங்கிய கண்களிடையே ஓர் உறுதியைக் கண்டார் கோபாலசுவாமி.

இரவின் முன் பாதி கழிந்துவிட்டது. அவர் இன்னமும் விழித்துக் கொண்டுதான் இருந்தார். ஏதோ ஒரு விநாடிப் பொழுதை ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டே. நீண்ட நேரம் பக்கத்திலேயே இருந்த பங்கஜத்தையும், கண்ணனையும் அவர்தான் வற்புறுத்திப் படுக்கப் போகும்படி அனுப்பி வைத்தார்.

எதிர்பாராதபடி ஒரு பகல் பொழுதுக்குள் என்னவெல்லாம் நடந்து விட்டன ! அவர் நினைக்கவில்லை. ஆனால் பங்கஜமும், கண்ணனும் இந்த அதிர்ச்சியை இத்தனை சீக்கிரம், இவ்வளவு சுலபமாக ஏற்றுக் கொண்டு விட்டார்களே! அவர்கள் நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருப்பார்கள். ஆனால் அவர்? முன்பு அவரே செய்து கொண்ட முடிவுதான். எல்லாவற்றையும் உதறிவிட்டுப் பழைய நிலைக்குப் போய்விட மாட்டோமா என்று ஏங்கி, அவரேதான் ஆசைப்பட்டார். அவர் முயற்சி இல்லாமல், எல்லாம் தற்செயலாய்க் கை நழுவிப் போய் விட்டன.

அந்த விநாடி நெருங்கி வருகிறது. அவர் மனம் மட்டும் ஏன் இன்னும் அப்படியும் இப்படியுமாய்ச் சஞ்சலப்படுகிறது? இன்னும் ஒரே ஒரு காரியந்தான் பாக்கி. தலையணையின் அடியில் கை நீட்டித் துழாவினார் கோபாலசுவாமி. இதோ இருக்கிறது.

தீப்பெட்டி !

மணி பன்னிரண்டரை. பரவசத்தின் முன்னறிவிப்பு உடலில் ஓடியது. இந்த உணர்வை விட்டு விடக் கூடாது. அவர் எழுந்தார். கையில் தீப்பெட்டியுடன் விளக்குகளைப் போடாமலே பழக்கத்தால் ஏற்பட்ட நிதானத்தோடு மூலை அறை ஒன்றை நோக்கி நடந்தார். அங்கே கிடந்த அடைசல்களை மெல்லமாய் நகர்த்தி விட்டு, சுவரில் குழிப்பிட்ட இடத்தில் மறைத்துச் சில கற்களை நகர்த்தினார். ஒரு பழைய தகரப் பெட்டியை இருளிடையே பிடித்து இழுத்துக் கீழே வைத்தார். பெட்டியைத் திறந்து தீக்குச்சியைக் கொளுத்தியதும், கட்டுக் கட்டாய் நூறு ரூபாய் நோட்டுக்கள் தெரிந்தன.

எல்லாவற்றையும் அள்ளி வெளியே போட்டார் கோபாலசுவாமி. இதற்குள் அந்தக் தீக்குச்சி எரிந்து தீர்ந்து விட்டது. இன்னொரு குச்சியை உரசி அந்தக் கறுப்புப் பணத்தைக் கொளுத்தித் தீர்த்து விட்டால்போதும். அவர் நிம்மதியை எண்ணி எண்ணி ஏங்கிய அந்தப் பழைய அமைதியான வாழ்வை, எட்டிப் பிடித்து விடலாம்.

சுற்றிலும் இருள். அந்த இருளிடையில் மனைவியும் மகனும் வந்து நின்றார்கள். அவர்கள்கூடத் தயாராய் இருந்தார்கள்.

இரண்டாவது தீக்குச்சியைக் கொளுத்தினார் அவர். வரிசை கலைந்து கிடக்கும் நோட்டுக் கட்டுகள். அவர் மனத்தில் ஓர் எண்ணம் ஓடியது. 'இவைகளை வெளுப்பாக மாற்றினால்?'

நேரம் ஓடியது.

அவர் மீண்டும் தள்ளாடி நடந்து தம் அறையில் விழுந்தார்.

அந்த விநாடி ! அது போய் விட்டது. அவர் நழுவ விட்டு விட்டார்.

இன்றும் அதோ உதயம் மிக அழகாய் உருப்பெறுகிறது. ஜன்னல் வழியே கீழ்வானின் செவ்வொளி தோட்டத்துப் பசுமரங்களின் இடையே வெகு தொலைவில் தெரிகிறது.

கோபாலசுவாமி ஜன்னலுக்கு எதிர்த்திசையில் முகம் திரும்பி விருக்கப் படுத்திருக்கிறார்.

உதயம் இரவிலிருந்து பிறக்கிறது. உதயத்தின் புனித நினைவுகளை இரவும், இருளும் தமக்குள் புதைத்துக் கொண்டன.

**வி ஜி பி** யால் உருவாக்கப்பட்ட தவணைத் திட்டம் ஏராளமான மக்களுக்கு உதவுகிறது.

RALEIGH
murphy
USHA
SAMY
Rallifan
Godrej
Sumeet
TIMESTAR
Hercules
RIVEX
SEVAK

## மேலும் மேலும் அதிகமான மக்கள் விஜிபியின் சுலபத் தவணைத் திட்டத்தால் பயனடைகிறார்கள்

எல்லோரும் சுலபமாகப் பொருள்கள் வாங்கும் வாய்ப்பு. தயாரிப்பாளர்களின் விலைக்கே தரும் தனிச்சிறப்பு. வசதிக்கேற்றபடி பணம் செலுத்தும் முறை. தேர்ந்தெடுத்து வாங்க ஏராளமான பொருள்கள். உத்திரவாதமுள்ள தரமான பொருள்கள். விற்பனைக்குப் பிறகும் திருப்தியளிக்கும் சேவை.

இத்தனைக்கும் மேலாக வாடிக்கையாளர் பெறும் மன நிறைவு.




**வி.ஜி. பன்னீர்தாஸ் & கோ.**

சைதாப்பேட்டை, சென்னை-15. போன் : 442333
கிளை : தி.நகர், சென்னை-17. போன் : 440246
புதிய ஷோ-ரூம் :
27, ரத்தன் பஜார், மதராஸ்-3. போன்: 23214

NAS-127A

இரண்டு லட்சத்துக்கு மேலான மக்களுக்கு சேவை புரியும் தனிச் சிறப்பு.

# கந்தன் துதிச் சிந்து



ஆறுபடை வீடுகொண்ட ஐயா — எனை,
ஆதரிக்க வேண்டும் முருகையா — உடன்,
ஏறுமயி லேறிக்குற மாதுடனே வேலெடுத்து
வருவாய் துயர் களைவாய்.

தந்தைக்குப தேசம்செய்த பாலா — உயர்,
சுவாமிமலை தன்னில்வளர் சீலா — உனைச்
சிந்தைமகிழ் வோடுதினம் தோத்தரித்தேன் ஞானந்தனை
தருவாய் அருள் புரிவாய்.

திருப்பரங் கிரிப்பதிக் குகனே — சிவ
ஸ்ரீ சக்திமரு வாலுதித்த சுதனே — உனை
விருப்புடனே வேண்டுகின்றேன் வேதனையைப் போக்கிடுவாய்
வேலா தேவ பாலா

சீரலைவாய்க் கோயிலுறை கோனே — சூரன்
சேனைவென்ற மாலின்மரு கோனே — இப்
பாரிலெனக் காதரவு யாருமில்லை உன்னையல்லால்
கந்தா சிவ மைந்தா.

திருவாவினன் குடிசுப்ர மணியே — சைவத்
திருப்பழ மாகநின்ற கனியே — கையில்
திருத்தண்டம் கந்தையுடை சீருடனே நீறணிந்த
சீலா வடி வேலா.

பழமுதிர் சோலைதரும் எழிலே — மக்கள்
பாவந்தனைப் போக்குந்தனிப் பொருளே — உனை
தொழுவதிலோர் இன்பங்கண்டு சுகிர்தமடைந் தேனதனால்
துதித்தேன் பதம் பிடித்தேன்.

குன்றுதோறும் ஆடல்செயும் குமரா — நலம்
கோடிகோடி யாய்அருளும் அமரா — மன
மன்றிலுனை வைத்துத்தினம் நான்வணங்க நீயருள்வாய்
முருகா திரு மருகா.

— கவி கா.மு.ஷெரீப் —



# அவரில்லாமல் நானில்லை!

## ரமணி ரங்கநாதன்




"ஏன் கமலா! டிக்கட்தான் வாங்கிட்டியே! இன்னும் ஏன் இங்கே நிற்கணும்? வாயேன் தியேட்டருக்குள்ளே போய் உட்காரலாம்."

"இருங்க அத்தை! ரெண்டு டிக்கட்தான் கிடைச்சுது. அவருக்கு டிக்கட் கிடைக்கல்லே. அதுக்குத்தான் உங்க பிள்ளை போயிருக்கார்!"

"அட பாவமே! அப்போ நீங்க ரெண்டு பேரும் பார்த்துட்டு வாங்களேன்! நான் வீட்டுக்குப் போறேன்."

"நல்லா இருக்கே நீங்க சொல்றது? நாலு வருஷத்துக்கு அப்புறம் வந்திருக்கீங்க. உங்களை விட்டுட்டு நாங்க மட்டும் போகிறதாவது?"

"அப்போ நாம்ப ரெண்டு பேரும் மட்டும் போயிட்டு வந்துடலாமே! அவன் வீட்டுக்குப் போகட்டுமே!"

"ஐயையோ! அவர் இல்லாமல் சினிமாவுக்குப் போகிறதா? சே.. சே!... கூடாது."

"என்னடி அதிசயமாயிருக்கு நீ சொல்றது? ஒவ்வொருத்தி தனியா ஊரையெல்லாம் சுத்தி, உலகத்தையே விலைக்கு வாங்கறா, நீ என்னடான்னா தனியாச் சினிமாவுக்குப் போகக் கூடாதாம்?"

"இல்லே அத்தை! அவர் இல்லாமல் நான் தனியா எங்கேயுமே போறதில்லே! போன வாரம் கச்சேரி ஒண்ணு... தெரிஞ்சவங்க தொந்தரவு பொறுக்க முடியாமல் அவங்களோடு கிளம்பிப் போயிட்டேன்! ஏன்டாப்பா போறேனும்னு ஆயிட்டுது. அரை மணி கூடக் கச்சேரியை ரசிக்க முடியல்லே. திரும்பிட்டேன்."

"அதிசயமாத்தான் இருக்கு போ! அந்தக் காலத்திலேதான் நாங்க பயந்து பயந்து அப்படி இருந்தோம். ஆண்பிள்ளை துணையில்லாம படி இறங்குவதும் தப்பாக இருந்தது. இந்தக் காலத்திலும் இப்படியா?"

"கடைத் தெருவிலே ஒண்ணு வாங்கணும்னுக்கூட அவர் இல்லாமல் நான் கிளம்பவே மாட்டேன். அக்கம் பக்கத்திலே வேணுமானால் கேட்டுப் பாருங்களேன்! அவங்களே கூடக் கேலி செய்திருக்காங்க. என்ன செய்யறது? அப்படியே பழகிப் போச்சு எனக்கு!"

"என்னமோ கமலா! சொல்றேனே தவிர, ஒவ்வொருத்தி சீவிச் சிங்காரிச்சுண்டு ஆண்பிள்ளை மாதிரி 'டாக் டாக்'னு நடந்துக்கிட்டுத் தனியாப் போறது நல்லாவா இருக்கு? ஊர் சுத்தட்டும்! கூடவே கட்டினவனையும் அழைச்சுக்கிட்டுச் சுத்தினா எவ்வளவு அழகா இருக்கு? கௌரவமா இருக்கு! அதுதான் குடும்பப் பெண்ணுக்கும் நல்லது...!"

"அடேடே! அவருக்கும் எப்படியோ டிக்கட் கிடைச்சுட்டுது போலிருக்கே! அப்பாடா! இப்பத்தான் நிம்மதியாயிருக்கு. வாங்க அத்தை, உள்ளே போகலாம்!"

"ஏன் கமலா, அவனோட 'டிக்கட்டை' மட்டும் வாங்கிக்கிட்டியே? அவன் கையிலேருந்து அழற குழந்தையையும் வாங்கிக்கக் கூடாதோ? பாவம்! அப்போ பிடிச்சு அழற குழந்தையை அவன் சுமந்துக்கிட்டிருக்கானே?"

"சீக்கிரம் வாங்க அத்தை! அப்புறம் விளக்கை அணைச்சிடுவாங்க. அவருக்கு 'சீட்' பிடிச்சு வச்சிருந்தா குழந்தை தூங்கினப்புறம் வருவார்!... அப்பாடா எனக்கு இப்பத்தான் மனசு நிம்மதியாச்சு! எங்கே அவருக்கு டிக்கட் கிடைக்காமத் திரும்பிப் போயிடுவாரோ... இந்த அழுமூஞ்சிப் பிள்ளை என்னைப் படம் பார்க்க விடாமப் படுத்திண்டு இருப்பானே என்று தவிச்சுப் போயிட்டேன்...! இனிமேல் நிம்மதியாப் படம் பார்க்கலாம். எதுக்கு அத்தை இப்படித் தெருவைப் பார்த்து நின்னுக்கிட்டு இருக்கீங்க?... உங்க பிள்ளை வருவார் அப்புறம். பாருங்களேன்! இப்படித் தொண தொணத்து அழுதுக்கிட்டு இருக்கிற குழந்தையை வச்சுக்க அவர் மட்டும் இல்லேன்னு என்னைப் படம் பார்க்கவே விடமாட்டான் உங்க அருமைப் பேரன்! இவனோட இந்த அவஸ்தைக்குத்தான் நான் அவர் இல்லாமல் தனியா வீட்டை விட்டுக் கீழே இறங்குகிறதே இல்லே...!"

---



"உங்க வீட்டுக்கு வேலைக்காரி வேணும்னீங்களே! நான் வரட்டுமா?"

"முதலில் ரூ. 25 கொடுத்து அப்ளிகேஷன் பாரம் வாங்கிப் பரீட்சைக் கட்டணம் ரூ. 16-ம் இண்டர்வியூ பீஸ் ரூ. 24-ம் கட்டணும். தேறினால், டிபாசிட் ரூ. 500, எச்சரிக்கை டெபாசிட் ரூ. 100 கட்டின பிறகு, அப்ரண்டிஸாக 4 வருஷம் வேலை பார்க்கணும். பயிற்சிக் காலத்தில் மாதம் ரூ. 4 சம்பளம் தருவோம். பர்மனெண்ட் ஆன பிறகு ரூ. 5 தருவோம். உனக்குச் சம்மதமா?"

# இருளும் ஒளியும்

திருக் கார்த்திகைக்கு இன்னமும் நான்கு நாட்கள் இருக்கின்றன. ஆனால் தெருவில் எல்லா வீடுகளிலும் இப்போதே விளக்குகள் வரிசையாக அணிவகுத்தன. வெடி வெடித்து, மத்தாப்புக் கொளுத்தி, தெருவெல்லாம் காகிதக் குப்பையாக்கி வைத்திருந்தார்கள் எங்கள் தெருக் குழந்தைகள்.

"என்ன, வேடிக்கை பார்க்கிறீர்களா?" என்று கேட்டுக் கொண்டே வந்தாள் என் மனைவி லட்சுமி.

"எத்தனைவித மத்தாப்புக்கள், — வாண வேடிக்கையே நடக்கிறது இங்கே! நீ இதைப் பார்க்காமல் எங்கேயோ உள்ளேயே அடைந்து கிடக்கிறாயோ?" என்றேன் நான், திரும்பாமல்.

"நரேந்தரு கடுதாசு போட்டாரா?" என்று கேட்டாள் லட்சுமி.

"நீ ஏதாவது இட்சிணியோ? இப்பத் தான் அவனைப் பற்றி நினைத்தேன்..... நீயும் அவனையே சொல்கிறாய்!"

"இதற்கு இட்சிணி எதற்கு? கார்த்திகை நெருங்கி விட்டது. பல கார்த்திகைகள் கழிந்து விட்டன. ஆனால் எனக்கு நரேந்தருவின் நினைவு போகிறதே இல்லை."

"எத்தனை வருஷமானாலும் என்ன?"

தெருவிலே மின் விளக்குகள் எரியத் தொடங்கி விட்டன. லக்ஷ்மி எழுந்து உள்ளே போய் விட்டாள்.

ஒரே ஒரு நிகழ்ச்சி — அதுவும் எத்தனையோ வருடங்களுக்கு முன்போ நடந்தது. எனக்குப் பழசாகவே தெரியாது என்று அவள் அடித்துக் கூறி விட்டாள். நரேந்திரநாத் சட்டர்ஜியிடம் அவளுக் கிருந்த அன்பு அத்தகையது. அறநாட்டிய அன்புக்குத்தான் மக்களிடம் அதிக உரிமை இருக்கிறது.

நான் வடக்கே ஒரு நிறுவனத்துக்காக வேலை செய்த சமயம் அது. எந்த நிறுவனம் எந்த ஊர் என்பதையெல்லாம் நான் விவரிக்கப் போவதில்லை. பழைய குப்பையைக் கிளறுவதில் யாருக்கும் லாபமில்லை.

ஒரு பெரிய அலுவலகம். பல வருஷங்களாகப் பல பேர்கள் வேலை செய்து சம்பளம் பெற்று வாழ்ந்து வந்த இடம். நிறுவனத்தில் என்ன கையிருப்பு, எந்த விதத்தில் செலவு என்பதெல்லாம் ஆண்டவனுக்குத்தான் வெளிச்சம். அந்த ஊழல்களையெல்லாம் ஆராய்ந்து, கணக்கு களைச் சரி செய்து ஒழுங்குபடுத்துவதற்காக என்னை நியமித்தனர். எனக்கு உதவிக்காக ஒரு சிறு அலுவலகம் அமைக்கப்பட்டது. சில குமாஸ்தாக்களை நியமித்தார்கள்.

முக்கியமாக மூன்று பேர்களை நான் தேர்ந்தெடுத்து என்னுடைய அந்தரங்கச் செயலர்களாக வைத்திருந்தேன். அட்சயகுமார் என்பவர் தெலுங்கர், நரேந்திரநாத் சட்டர்ஜி வங்காளி, வாசுதேவன் என்பவர் தமிழர். வேலையின் ரகசியத்துக்காக அவர்கள் மூவரையும் என் வீட்டின் தெருத்தாழ்வாரத்தில் உள்ள ஓர் அறையில் இருக்கும்படி சொன்னேன்.

நரேந்தர் தயங்கினான். "தாதாஜீ, நான் எவ்வளவு சீக்கிரம் வேண்டுமானாலும் வருகிறேன். அங்கே, என் விடுதியிலேயே இருக்கிறேனே?" என்றான்.

"மற்ற இரண்டு பேர்கள் இருக்கும் போது உனக்கு மட்டும் என்ன ஆட்சேபணை?" என்று நான் அடித்துக் கூறவும், அவன் சம்மதித்தான்.

எல்லோரும் விடியற்காலை ஐந்து மணிக் கெல்லாம் எழுந்து விடுவோம். ஸ்நான பானங்களை முடித்துக் கொண்டு அலுவலகத் துக்குப் போய் விடுவோம். எட்டு மணிக்குக் காலை ஆகாரம், மதியத்துக்கு உணவு, மீண்டும் மாலை நான்கு மணிக்குச் சிற்றுண்டி, இரவு ஏழு மணிக்குச் சாப்



பாடு — இப்படி அவ்வப்போது என் மனைவி செய்து அனுப்புவாள். இப்படியே பத்து மாதங்கள் செய்தோம்.

கார்த்திகைக்குள் எல்லாக் கணக்குகளையும் அறவே முடித்துவிட வேண்டும் என்று உத்தேசித்திருந்தோம். மும்முரமாக வேலை நடந்து கொண்டிருந்தது. எனக்கும் இந்த வேலையை முடித்துவிட்டு எப்பொழுது நம் நாட்டுக்கும், நம் குழந்தைகளிடமும் போவோம் என்று துடிப்பாக இருந்தது. கார்த்திகைப் பண்டிகை என் குடும்பத்துடன் கொண்டாட வேண்டும் என்று நினைத்திருந்தேன். எப்படி வேலை செய்தாலும் பண்டிகைக்கு ஊருக்குப் போக முடியாது. கணக்குகளையாவது முடித்துக் கொண்டு நிம்மதியாக இருக்கலாம் என்று



லோரித்து. வையங்களை உடம்பிலேயிட்டு வேலை வாங்கிக் கொண்டிருந்தேன். அவர்களும் என்னுடன் உயிரைக் கொடுத்து வேலை செய்து வந்தார்கள். வேலையிலும் வீட்டிலும் ஒரே குடும்பம்போல நாங்கள் வாழ்ந்து வந்தோம்.

நல்ல பிள்ளைகள். எங்களுடன் ஒன்றி விட்டவர். என் மனைவியும் அவர்களை அயல்வீட்டுப் பிள்ளைகள் என்று நினைப்பே இல்லாமல் நடத்தினாள்.

அட்சயகுமாருக்கு எல்லாரிடமும் சலுகைதான். வாசுதேவன் மாமியிடம் மிகவும் சகஜமாக அடுப்படியில் வேலை செய்வான். என் எதிரே உட்காரக்கூட மாட்டான். மரியாதையாகவே நடந்து கொள்வான். நரேன் யாரிடமும் நெருங்க மாட்டான். எல்லாரும் இருக்குமிடத்தில் அவன் இருப்பானேயன்றி ஒரு பேச்சுக்கூடப் பேசமாட்டான்.

அழகாக நடந்தது எங்கள் குடும்பம். அ மை ந் வி ட அமைதியாக நடந்தன அநுவங்கள். — அன்று ஒரு நாள் வரை.

குமாஸ்தாக்கள் தத்தம் வேலைகளைச் செய்வார்கள். அவர்களை மேற்பார்வை பார்த்து, கணக்குகளைத் தயார் செய்து, கட்டிப் பெருக்கிச் சீர்செய்து என்





# அநுத்தமா

விடம் காட்டுவார்கள். நான் சீர்தூக்கி ஆராய்ந்து முடிவு காண்பேன். அவரவர்களும் பல முறைகளால் கணக்கெடுத்து வருவார்கள். அதற்கு உரைகல்லாக என்னிடம் குறிப்பு ஒன்று இருக்கும். அவர்கள் அறியாமல் நான் ஒரு முறை டால்ட்டன் இயந்திரத்தின் உதவியுடன் குறிப்பு எடுத்து வைப்பேன். ஒப்பு நோக்கிச் சரிபார்த்து அன்றையக் கணக்கை முடிப்பேன். இதுவரை அதி லாகவமாகச் செய்து கொண்டிருந்த இந்த வேலை அன்று ஓர் ஆட்டம் கண்டுவிட்டது.

நரேந்திரனின் வேலையைச் சரிபார்த்துக் கொண்டிருந்தேன். குறுக்கு வரிசையையும், நேர் வரிசையையும் கூட்டிக் கொண்டே வரும் போது ஓர் இடத்தில் கணக்கு உதைத்தது. கீழே அவன் கூட்டிப் போட்டிருந்த எண் என்னவோ என் கைக் குறிப்புடன் ஒத்திருந்தது. கணக்கைப் பார்க்கும்போது ஒத்து வரவில்லை. நான் பொறுமையாக மீண்டும் சோதித்தேன். நரேந்திரனையே நோக்கச் சொன்னேன். அவன் சரியாக இருப்பதாகக் கூறினான். "நிதானமாகப் பார்" என்றேன். மீண்டும் கொஞ்ச நேரம் குனிந்து என்னவோ பார்வையைச் செலுத்திவிட்டு, சரியாக இருப்பதாகவே கூறினான்.

மூன்று பிள்ளைகளுக்குள் நரேந்திரன்தான் நிதானமுடையவன். பொறுப்பு உணர்ச்சியோடு இருப்பவன் என்று அவன்பால் நான் தனியான மதிப்பு வைத்திருந்தேன். கணக்கிலும் கெட்டிக்காரன் அவன். இப்பொழுது பிடிவாதமாக, நான் இரண்டு முறை எச்சரித்தும், தன் பிடியைத் தளர்த்தாமல் சொல்கிறானே? என் உள்ளத்தில் ஒரு கொந்தளிப்பு ஏற்பட்டது.

'பார்த்தால் பூனை மாதிரி இருக்கிறான்! கடைசி நாள் வரை காத்திருந்தானா இந்த மோசடி செய்ய? கூட்டி வராத ஓர் எண் வந்ததாக அவன் எப்படி எழுத முடியும்? என் கைக்குறிப்பைப் பார்த்துத்தானே இருக்க வேண்டும்? எப்படிப் பார்த்திருப்பான்? நான் வைத்திருப்பது யாருக்குமே தெரியாது என்றுதானே நினைத்திருந்தேன்? எப்படியோ கண்டு கொண்டு அதற்குச் சரிக்கட்டிவிட்டானே? இதுபோல் பொய்க் கணக்குகளை எழுதி எழுதித்தானே இந்தக் கம்பெனிக்கு இப்படி ஊழல் நிலை வந்தது? அதை நீக்குவதற்காக என்னை நியமித்த பிறகும், என் கண்காணிப்பில் கூட பணத்தைத் தூவி விட்டு ஒருவன் கணக்கில் ஜாலம் காட்டுவதா? பணத்தை வைத்து விளையாடுவதா? பணம் மட்டுமா — என் மானம் மரியாதையைக்கூட அல்லவா விளையாடிவிட்டான்? நான் முழு நம்பிக்கையோடு அவனிடமே விட்டிருந்தால் என் கதி என்ன? சங்கோஜி என்று நினைத்தோமே! நயவஞ்சகனோ?

ஒருவாறாக என் மனதை அமைதியாக்கிக் கொண்டு நரேந்திரனை அழைத்தேன். நான் அவனிடம் முழு நம்பிக்கை வைத்திருக்க, அவன் என்னைத் துரோகம் செய்து விட்டான் என்று நினைக்க நினைக்க என் ரத்தம் கொதித்தது. ஆயினும் சினத்தைச் சிறிதும் வெளிக் காட்டாமல் அடக்கிக் கொண்டு மெதுவாக மூவரையும் அழைத்தேன்.

"நரேந்திரா, என்ன காரியம் செய்து விட்டாய்? நேர்மை என்பது கையிலே பணம் எடுக்கும்போதுதான் என்றில்லை. எழுதும் போதும் அது இருக்க வேண்டாமா?" என்றேன்.

"என்ன சார் சொல்கிறீர்கள்?" என்று அவன் புரியாமல் கேட்டான்.

'கைதேர்ந்தவன் போலும்! வேஷம் நன்றாகப் போடுகிறான்' என்று முடிவது என் மனம்.

"கணக்கைச் சரிக்கட்டலாமா? கூட்டல் சரியாக வரவில்லை என்று என்னிடம் சொல்லக் கூடாதோ? நான் உதவி செய்ய மாட்டேனா?"

"கணக்கு... சரி.... கட்டுவதா?" என்று குழறினான் அவன்.

"பசப்பாதே அப்பா. அந்த மொத்தம் உனக்கு எப்படித் தெரிந்தது? சொல்லிவிடு."

"எந்த மொத்தம்?"

எனக்குக் கோபம் ஏற ஏறப் பேச்சில் அமைதி வந்துவிடும். என் குரல் தாழும். "என்னிடம் மதிப்புக் குறிப்பு இருக்கிறது என்பதை அறிந்து கொண்டாய். அதற்குச் சரியாக நீ கணக்கு எழுதி விட்டாய். அப்படித்தானே?"

"நான் உண்மையாக...."

"உண்மை எங்கே இருக்கிறது நரேந்திர நாத் சட்டர்ஜி?" என்றேன்.

அவனை நான் 'முட்டாள், துரோகி, மகா பாவி, நயவஞ்சகன்' என்று திட்டியிருந்தால் கூட அவன் பொறுத்திருப்பான். நான் அவனை வெகு மரியாதையோடு அந்நியனைப் பேசுவது போல முழுப் பெயர் வைத்துச் சம்பிரதாயமாக அழைக்கவும் அவன் அசந்து விட்டான். குழந்தைபோல் 'கோ'வென்று அழுது விட்டான்.

அவன் அழவும் எனக்குக் கொஞ்சம் அதிர்ச்சியாகி விட்டது. என் கைப்பையை அடக்கிக்கொண்டு வீடு கிளம்பி விட்டேன். நரேந்திரன் கல்லால் சமைத்த சிலைபோல அமர்ந்திருந்தான். மற்ற இருவரும் தர்ம சங்கடமான நிலையில் என்னையும் பார்க்க முடியாமல், அவனையும் தேற்ற முடியாமல் தவித்துக் கொண்டிருந்தனர்.

அந்த வட்டாரத்திலேயே எங்கள் 'குடும்பம்' பார்ப்போரின் மதிப்பைப் பெற்றிருந்தது. இன்று அங்கே ஒரு பூசல் என்று பறை சாற்ற யாவர்க்கும் சங்கடமாக இருந்தது.

இரவு வெகு நேரம் ஆகியும் அவர்கள் மூவரும் வரவில்லை. நான் மிகச் சுருக்கமாக ஆகாரத்தை முடித்துக் கொண்டு படுத்து விட்டேன். என் மனைவி மட்டும் வாசல் தாழ்வாரத்தில் அமர்ந்து அவர்களை வழி நோக்கிக் கொண்டிருந்தாள்.

"உள்ளே வரமாட்டாய் நீ? அந்தத் தடியன்கள் எங்காவது கொட்டிக் கொண்டிருப்பான்கள்" என்று ஒரு முறை கூப்பிட்டேன். அவள் வரவில்லை.

"கோபிக்கிறதானால் சாப்பிட்ட பிறகு கோபிக்கலாமே? நரேந்துருவுக்குப் பிடிக்குமே என்று ரசமலாய் செய்து வைத்திருந்தேன்." அவள் முணுமுணுத்தது கேட்டது.

நான் பேசவேயில்லை. இருட்டு அடர்ந்து படர்ந்து கொண்டே வந்தது. எனக்கும் உறக்கம் வரவில்லை. அவளாவது உள்ளே வந்து

# இப்பொழுது இவர் தமது வேலைகள் அனைத்தையும் செய்ய ஒரு டிராக்டர் வைத்திருக்கிறார்

**காரணம் யூகோ பாங்க் பண உதவி செய்தது**

யூகோ பாங்க் பண உதவித் திட்டத்தை பயன் படுத்திக்கொண்டு இவர் நவீன விவசாய முறையிலிறங்கியுள்ளார். இப்பொழுது விளைச்சலும் அதிகம், வருமானமும் அதிகம்.

யூகோ பாங்க் பல வழிகளில் உதவுகிறது. அதனால் டிராக்டர்கள், உபகரணங்கள், பம்ப் செட்டுகள், தரமான விதைகள், உரங்கள் வாங்கலாம்.

*விவரங்களுக்கு அருகிலுள்ள பாங்க் கிளையுடன் தொடர்பு கொள்க.*

**யூகோ பாங்க் வளம் பெற வழி வகுத்தளிக்கின்றது**




தலைமை ஆபீஸ் : கல்கத்தா



UCO-12/70




'ஸான்:ஃபரைஸ்ட்' உலகெங்கும் அறியப்பட்டு, நம்பிக்கைக்குப் பாத்திரமாகியுள்ள ஒரு டிரேட் மார்க்காகும். உலகெங்கும் அதிகரித்துவரும் விற்பனை 'ஸான்:ஃபரைஸ்ட்' முத்திரையிட்ட துணிகளின் நம்பிக்கைக்குகந்த உழைப்பிற்குச் சான்றாகும்.

1968ம் வருடம் முதல் மூன்று மாதங்களில் இந்தியாவிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்ட 'ஸான்:ஃபரைஸ்ட்' முத்திரையிட்ட பருத்தி கலந்த துணிகளின் மதிப்பு ரூ. 37,68,885. 1970ம் வருடம் முதல் மூன்று மாதங்களில் ஏற்றுமதி செய்யப்பட்ட முத்திரையிட்ட துணிகளின் மதிப்பு ரூ. 85,09,990—125% அதிகரிப்பு. இது சுருங்காத்தன்மையின் நம்பத்தகுந்த உத்தரவாதமாகிய 'ஸான்:ஃபரைஸ்ட்' முத்திரை, நம் நாட்டில் தயாரிக்கப்பட்ட துணிகள், உடைகளின் ஏற்றுமதியை மேன்மேலும் உயர்த்த உதவி செய்கிறது. மற்றும், போட்டிமிக்க வெளிநாட்டு மார்க்கெட்டுகளில் இந்தியாவுக்கு அந்நியச் செலவாணியைத் தேடிக் கொடுக்கிறது என்பதை நிரூபிக்கிறது.

'ஸான்:ஃபரைஸ்ட்' என்னும் டிரேட் மார்க்கின் [illegible]

மேலும் விவரங்களுக்கு: ஸான்:ஃபரைஸ்டு ஸர்வீஸ், 95, மரீன் டிரைவ், பம்பாய்-2.

படுத்திருந்தால் நான் தூங்கியிருப்பேனோ? அவனும் அங்கேயே இருட்டில் இருந்தான்.

பத்து மணிக்கு மூவரும் வந்தார்கள்.

''நரேந்துரு! ஏன் இவ்வளவு நேரம்?'' என்று பரிவுடன் விசாரித்தாள் என் மனைவி.

அவள் கேள்விக்கு யாருமே பதில் சொல்லவில்லை. அவள் அவர்களைச் சாப்பாட்டிற்கு அழைத்தாள். முதலில் அவர்கள் மறுத்தார்கள் போலும். பிறகு எல்லோரும் உணவு அருந்தியிருக்க வேண்டும். அவரவர்கள் இடங்களில் படுக்கையைத் தட்டிப் போடுவது கேட்டது. என் மனைவி சமையலறையை மூடிக் கதவுக்குச் சங்கிலி போடுவது தெரிந்தது. அதன் பிறகு நானும் உறங்கிவிட்டேன்.

அடுத்த நாள் விடியற்காலையில் நான் பல் துலக்கிவிட்டு வழக்கம் போலக் குளியலையும் முடித்துக் கொண்டு முன்பக்கம் வந்தேன். மூன்று பேரும் இலை முன் மௌனமாக அமர்ந்திருந்தார்கள். முன்னாள் இரவோடு இறுதிக் கணக்கு முடிந்துவிட்டது. இனி ஐந்து மணிக்கே எழுந்து அலுவலுக்குப் போகவேண்டிய அவசியமின்மையை எடுத்துக் காட்டுவது போல அமர்ந்திருந்தனர்.

என் மனம் இன்னும் அமைதி பெறவில்லை. சீக்கிரமே பூஜையை முடித்துக்கொண்டு கூடத்துக்கு வந்தேன். அப்பொழுதும் இலைகள் காலியாகவே இருந்தன. மூவரும் அமர்ந்திருந்தனர் மௌனமாக. நான் எனக்கென்று இருந்த இருக்கையில் அமர்ந்தேன்.

நான் இட்டிலியைப் பிட்டுச் சாப்பிட்டுக் கொண்டே அவர்களை ஓரக் கண்ணாலும் கவனித்தேன். அவர்களும் என்னவோ ஒப்புக்கு இலையில் இருந்தார்களே தவிர, ஒரு கவளம் கூடச் சாப்பிடவில்லை.

''ஏன் இப்படி எல்லோரும் உபவாசம் இருக்கிறீங்க? லாக, நீதானே மாவு ஆட்டினாய்? உனக்குக்கூடவா இட்டிலி பிடிக்கலே?'' என்று என் மனைவி கேட்டாள்.

நான் தலை நிமிரவில்லை. ஆனால் என் செவிகள் இரண்டும் கூர்மையாகக் காத்திருந்தன. ஒருவரும் பதிலே சொல்லவில்லை.

''என்னவோ போங்கள்! நேற்றோடு கணக்கு வேலை முடிந்து போயிற்றே. இன்னிக்காவது நிம்மதியாகப் பலகாரம் சாப்பிடுவீங்கன்னு ஆசையா விதவிதமாச் சட்டினி அரைச்சேனே, என்னைச் சொல்லு. உங்களுக்கு மூட்டை கட்டி அனுப்பணும், அது ஆறிப்போன பிறகு சாப்பிடணும்'' என்று என் மனைவி தமிழிலும் ஹிந்தியிலும் மாற்றி மாற்றி முணுமுணுத்தாள்.

அட்சயகுமார் தான் சிரிக்க முயன்றான். அதுவும் பரிதாபமாக இருந்தது. எங்கள் தோழமை பிரிந்து விட்டதை லட்சுமி அறிய மாட்டாள். ஆதலால் வீட்டில் இன்னமும் சங்கடம் அதிகரித்தது.

நரேந்திரனிடம் எனக்கிருந்த நம்பிக்கை தகர்ந்து சரியப்பட்டதும், என் உள்ளே ஆயிரம் பிரச்சினைகள். நானே எவ்வாறு நடப்பது என்று மேற்கொண்டு யோசனை செய்த வண்ணம் இருந்தேன். தண்டிக்கப் போகிறேன் அவனை. அவனை என் நிழலில் வைத்திருப்பது உசிதமல்ல. அதைச் சொல்வது எப்படி என்று தவித்தேன்.

நான் ஒருவிதமாகத் தீர்மானம் செய்து கொண்டேன். கம்பெனிக்காரர்களுக்கு எழுதுவதற்கு முன் நானே இந்த விஷயத்துக்கு ஒரு முடிவு கட்ட வேண்டும். என் மனைவியை அழைத்து, ''அவர்கள் இனிமேல் அவரவர் வீடுகளுக்குப் போகலாம் என்று சொல்லிவிடு'' என்றேன்.

'' என் வாயால் சொல்ல மாட்டேன். உங்களுக்குக் கீழ்தான் அவர்கள் வேலைக்காரர்கள். எனக்குப் பிள்ளைகள் மாதிரி. தாட்சண்யமில்லாமல் பேச முடியாது'' என்றாள் லக்ஷ்மி.

''பெரிய விஷயம், லக்ஷ்மி. உனக்கு விவரிக்க இது தருணமில்லை. தாட்சண்யமாவது, மண்ணாவது இந்தக் காலத்தில்! துரத்திவிடு'' என்றேன்.

எத்தனை தடவை நினைத்தாலும் என் மனம் ஆறவில்லை. நாம் குழந்தை போல நினைத்தவன் இப்படித் துணிந்து விட்டான்?

வண்ணானுக்குத் துணி கொண்டு போட அவன் முன்வந்ததே இந்த உத்தேசத்தில்

## வெள்ளி விழாக் காணும் திருப்பாவை நிகழ்ச்சி

சென்னை புரசைவாக்கம் லேடி எம். ஸிடி. பெண்கள் உயர்நிலைப் பள்ளியில் பல்லாண்டுகளாகத் தலைமைத் தமிழாசிரியராகப் பணியாற்றி வரும் வித்வான் கேதாரேச்வர சர்மா மற்றும் ஒரு நற்பணியையும் ஆண்டுதோறும் செய்து வருகிறார். ஸ்ரீ ஆண்டாள் திருப்பாவை வகுப்பை மார்கழி மாதம் முழுவதும் நடத்தி, இந்த ஆண்டு இவ்வகுப்புக்கு வெள்ளி விழாக் காண்கிறார்.

இதையொட்டி இவரிடம் தமிழ் பயிலும் மாணவிகள் சில நற்பணிகளைச் செய்ய உத்தேசித்துள்ளனர். திருப்பாவைப் போட்டியில் வெற்றி பெறும் மாணவிகளுக்குப் பரிசு அளித்தல், ஆண்டாள் திருக்கல்யாண உற்சவத்தைச் சிறப்பாக நடத்துதல், தங்களுக்குத் தெய்வத் தமிழைப் பரிவுடன் கற்பித்து இந்த ஆண்டுடன் பள்ளியிலிருந்து ஓய்வு பெறும் ஆசிரியர் கேதாரேச்வர சர்மாவைக் கௌரவித்தல் போன்ற இந்த நல்ல திட்டங்களுக்குப் பொருளுதவி எதிர்பார்க்கிறார்கள். பள்ளியின் பழைய, புதிய மாணவிகள் மட்டுமின்றிப் பக்திப் பணியில் ஈடுபட விரும்பும் அனைவருமே இயன்ற தொகையை அனுப்பி வைக்கலாம் கீழ்க் கண்ட விலாசத்துக்கு:

திருப்பாவை வகுப்புச் செயலாளர், லேடி எம். ஸிடி. முத்தையா செட்டியார் உயர்நிலைப் பள்ளி, சென்னை—7.



"ஏன் குனிந்து சிரமப்படுறேள்? நிமிர்ந்து நின்று கொண்டே நீ சாட்சியம் சொல்லலாமே!"

"பரவாயில்லே! பழக்க தோஷம். இப்படி இதுக்கு வழியாகப் பார்த்தால் தான் எனக்குத் தெம்பாக இருக்கு!"

தானே? எப்போதாவது சட்டைப் பையில் வைத்து விட்டேனே? இந்த என் வழக்கத்தைக் கவனித்துத்தான் அவனும் இந்த வஞ்சகன் நாடகத்தையே ஏற்படுத்திக் கொண்டு விட்டானோ? நான் ஒருவனைத் தேர்ந்தெடுத்தால் அவன் மணியாகத் திகழ்வானே யன்றி, எப்பொழுதும் என் மதிப்பீடு பழுதானதில்லையே? நரேந்திரனை நம் வீட்டுப் பிள்ளை போல நினைத் தேனே? மூன்று பேர்களில் அவனல்லவா ரத்தினம் என்று தேர்ந்தெடுத்தேன்!

எனக்கு வீட்டில் இருக்கவும் பிடிக்கவில்லை. என் மனைவியை இந்த மூன்று பிள்ளைகள் துணையில் விட்டு விட்டுச் செல்லக் கூட நம்பிக்கை குறைந்து விட்டது. நேர்ந்த தவறு சரிக்கட்ட முடியாததல்ல. நரேன் வந்து தன் தப்பை ஒப்புக்கொண்டால் அவனை மன்னித்துவிட்டுப் பிழையை வெளியே காட்டாமல் இருந்து விடுவது என்றிருந்தேன். ஆனால் அந்தப் பயல் கொஞ்சம்கூட வருந்தினதாகத் தெரியவில்லையே? நானல்லவோ செய்யக் கூடாததைச் செய்துவிட்டதுபோல நடந்துகொள்கிறேன்!

கார்த்திகைக்காக அன்று வீட்டில் மாக் கோலம் மிளிர்ந்தது. மாவிலைத் தோரணம் 'வா, வா' வென்று அழைத்தது. லக்ஷ்மி தெருவில் அகல் விளக்குக்காரியிடம் பேரம் பேசிக்கொண்டிருந்தாள். அவள் "ஆறு, பன்னிரண்டு, பதினெட்டு" என்று எண்ணி னாளே தவிர, என்னை ஏறெடுத்தும் பார்க்க வில்லை.

நான் உள்ளே போய்ச் சட்டையைக் கழற் றிக்கொண்டிருந்தேன். திடீரென்று அட்சய குமார் ஓடிவந்தான். எப்பொழுதும் பார்க் கும் மரியாதை கூடப் பார்க்கவில்லை. "தாதாஜி, தாதாஜி!" என்று என் முகத் தருகில் வந்து கூக்குரலிட்டான்.

"என்ன?" என்று சீறி விழுந்தேன் நான்.

"நரேந்தர் செய்த தப்புப் புரிந்துவிட்டது. அதாவது அப்படித்தான் இருக்க வேண்டும். இப்போ, மாமி பாருங்கோ, ஹிந்தியிலே எண்ணவில்லையே? கணக்குப் போடும்போது அவரவர் தாய் பாஷையில்தானே எண்ணு வோம்? ஹிந்தியிலே நாங்கும், ரோமன் எட் டும் ஒரே மாதிரி இருக்கிறதல்லவா? அதனால் எங்காவது தவறு வந்திருக்குமோ? எட்டை நாங்கு என்று எழுதிவிட்டிருப்பானோ? வாயில் எட்டு என்று சொல்லி எண்ணி..."

என் இதயத்திலே யாரோ பாலாபிஷேகம் செய்த மாதிரி இருந்தது. "வாருங்கள்" என்று அவர்களை அழைத்து வைத்துக் கொண்டு கணக்கைப் புரட்டினேன்.

நரேந்திரன் கண்களில் நீர் ததும்பிநின்றது. "ஆமாம், தாதாஜி. நான் வங்காளியில்தான் மனக்கணக்கு எண்ணுகிற வழக்கம்" என்று கூறி அவன் என் காலைப் பிடித்தான்.

தவறு சரியாகி விட்டது. வீட்டில் இருந்த மூட்டமும் கலைந்து விட்டது. திடீரென்று சூரியோதயம் ஆனது போல எல்லோர் மன மும் தெளிவடைந்து விட்டன.

கார்த்திகையைக் கோலாகலமாகக் கொண் டாடினோம். நரேந்திரனுக்கு வேஷ்டி தந்த போது, "தாதாஜி, உங்கள் நம்பிக்கையை மீண்டும் பெற்றுவிட்டேனே, அதைவிட எந்தப் பரிசு உயர்வாக இருக்க முடியும்?" என்று கூறி அழுது விட்டான்.

நான் என் மனைவியிடம் பேசிக்கொண் டிருந்தபோது கேட்டேன், "நாங்கள் இருந்த குழப்ப நிலை உனக்குத் தெரியவில்லையா?" என்று.

"தெரியுமே? முதல் நாளே தெரியும்" என்றாள், அவள் அமைதியாக.

"என்ன தெரியும்? தெரிந்துமா நீ சாவ தானமாகக் கோலம் போட்டு, பண்டிகைக்கு ஏற்பாடு செய்தாய்?" என்றேன் ஆத்திரமாக.

"இப்ப எதற்கு அதைப் பற்றிக் கோபம்? நீங்கள் மனிதர்களைச் சரியாகத்தான் மதிப் பிடுவீர்கள் என்ற நம்பிக்கை எனக்கு இருந் தது. தவறு தானாகத் தெரிய வேண்டும் என்று ஆண்டவனைப் பிரார்த்தித்துக் கொண்டே, அந்தப் பிள்ளைகளையும் என்னுடனே இருத்தி உற்சாகப்படுத்திக் கொண் டிருந்தேன்" என்றாள் லக்ஷ்மி.

இதைவிட மேலான பரிசு எனக்கு மட்டும் கிடைக்குமா? ஆனால் நான் வாய் விட்டு ஒன்றும் கூறவில்லை. சிரித்தேன்.

இன்று அதையெல்லாம் அசை போட்டுக் கொண்டு நின்றதில், என் மனைவி அழைத் ததை மறந்து விட்டேன்.

"ஆகாரம் பண்ணிவிட்டு வாசலுக்கு வருவோம். நாமும் சாஸ்திரத்துக்குக் கொஞ் சம் குங்கிலியம் தூவவேண்டாமா நெய்ப் பந்தத்தில்?" என்றாள்.

"யாருக்காக?... " என்றேன் நான் சிரித் துக்கொண்டே.

"நம் பழைய குடும்பத்தின் க்ஷேமத்துக் காகத்தான்" என்றாள் லக்ஷ்மி, பதில் புன் முறுவலுடன்.

அவளுடன் ஒப்புக் கொள்வது போல எதிர் வீட்டுப் பையன் கொளுத்திய பூவாணம் செடியாக வளர்ந்து மலர்களாக ஒளியைச் சிந்தியது.




★ இக் குறியிட்ட கடிதம் ரூ. 15/- பரிசு பெறுகிறது.

அண்மையில் வருமான வரி இலாகா இரண்டு 'வாரங்'களைக் கொண்டாடியது. வரி கொடுப்போருக்குத் திருப்பித் தரவேண்டிய தொகை ஏதேனும் இருந்தால் அதைக் கொடுக்க, "பணம் திருப்பித் தரும் வாரம்" ஒன்று! வருமான வரிக் கணக்குகள் சரிவரப் பார்க்கப்படாமல் பாக்கி நின்றால் அவற்றைப் பைசல் செய்ய "பாக்கி சாக்கி வாரம்" மற்றொன்று! (Refund Week and Arrears Week). பத்திரிகைகளில் இவை பற்றி அறிவிப்புகள் வந்திருந்தன.

நான் உடனே வருமானவரிக் காரியாலயத்துக்குப் போனேன். "ரீஃபண்டு வீக் என்று போட்டிருக்கிறதே, யாரைப் பார்க்க?" என்று 'விசாரணை'யில் கேட்டேன். ஓர் அறைக்கு அழைத்துப் போனார்கள். அங்கிருந்த பலரும் என்னைப் பந்தாடிய பிறகு எனக்குச் சேர வேண்டிய ரூபாய் இருபத்தெட்டுக்காக ஓர் அதிகாரியைப் பார்க்குமாறு சொன்னார்கள். "முதல் மாடி நாற்பத்து நாலாம் அறை" என்று அடையாளம் கூறவே அங்கு சென்றேன். அங்கு நாற்காலி மட்டுமே இருந்தது. விசாரித்தேன். பியூன் ஒருவர், "ஆபீசர் வேறு ஓர் ஆபீசருடன் பேசிக்கொண்டிருக்கிறார் சார்!" என்றார்.

என் மனைவியின் வருமான வரியைக் கணக்கிடுவதில் ஒரு தவறு நேர்ந்திருந்தது. ரூ.116 வரி என்பதற்குப் பதில் ரூ. 182 தரவேண்டுமென்று போட்டிருந்தது. அதைச் சுட்டிக்காட்டித் திருத்திக் கொள்ளலாமே என்று குறிப்பிட்ட அந்த அதிகாரி எங்கிருப்பார் என்று விசாரித்தேன். "நாலாவது மாடிக்குப் போங்கள்" என்று பதில் கிடைத்தது. நாலாவது மாடியில் 'ரீஃபண்ட் வீக்' என்று போர்டு போட்டுக் கொண்டு ஒரு மேஜைக்குப் பின் இருவர் அமர்ந்திருந்தனர். என் பிரச்னையைச் சொன்னதும் அவர்கள் எதையோ குறித்துக் கொண்டு என்னை ஓர் அறைக்கு அனுப்பி வைத்தனர். அங்கிருந்த பலருள் ஒருவர், "நீங்கள் குறிப்பிடும் 'ஃபைல்' இங்கு இல்லையே" என்று கூறி வேறு ஓர் அறைக்கு அழைத்துப் போனார். அங்கு ஒரு நாற்காலியைச் சுட்டிக்காட்டி, "நீங்கள் சந்திக்க வேண்டியவர் இங்கு வந்து உட்காருவார். அவரைக் கேளுங்கள்" என்று சொல்லி விட்டுப் போய் விட்டார்.

ஆக, பணம் திருப்பித் தரும் வாரத்துக்காக ஒரு காலி நாற்காலியையும் பாக்கி சாக்கி வாரத்துக்காக மற்றொரு காலி நாற்காலியையும் தரிசனம் பண்ணிவிட்டு வந்தேன். எனக்கு ரொம்ப சந்தோஷம்! இந்த இரண்டு வாரங்களையும் வெற்றிகரமாக வருமான வரி இலாக்கா கொண்டாடி விட்டது, என்னைப் பொறுத்தவரையில். ஏனென்றால் நாம் இந்த விதமாகத்தான் இந்த வாரங்கள் கொண்டாடப் படும் என்று எண்ணிக் கொண்டே போனேன். ஏமாற்றம் துளிக்கூட ஏற்படவில்லை எனக்கு!

சென்னை—34
28—11—70 குட்டிகிருஷ்ணன்

★ பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் திராவிட முன்னேற்றக் கழகத்தின் மாணவர் பிரிவுகளைத் தொடங்க வேண்டும் என்று முதல் அமைச்சர் திரு கருணாநிதி தம் கட்சிக்காரர்களிடம் தெரிவித்திருக்கும் யோசனை மிகவும் கண்டனத்துக்குரியதாகும்.

படிப்பில் மட்டும் முக்கிய கவனம் செலுத்திப் பட்டம் பெற்றுப் பிற்கால வாழ்வை நல்ல முறையில் அமைத்துக் கொள்ள உதவும் பருவம் மாணவப் பருவம். அவர்கள் கவனம் படிப்பில் மட்டுமே இருக்க வேண்டும். ஜனநாயகக் கோட்பாடுகள், ஜனநாயகம் இயங்கும் முறை போன்றவற்றைக் கற்பிக்கலாம். ஆனால் அரசியலை நோக்கி அவர்கள் கவனத்தைத் திருப்புவது அவர்களது எதிர்காலத்தை மிகவும் பாதிக்கும். இது எனது அநுபவத்தில் கண்ட உண்மை. நான் சென்ற ஐந்து ஆண்டுகள் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் படித்தவன். அங்கு ஒவ்வோர் ஆண்டும் மாணவர் கவுன்சில் தேர்தல் நடக்கும்போது காங்கிரஸ், தி. மு. க., கம்யூனிஸ்ட் என்று ஒவ்வொரு கட்சியின் சார்பாக வேட்பாளர் நிற்பர். இதன் காரணமாகக் கட்சிப் பூசல்கள் ஏற்பட்டு மாணவர்களிடையே கைகலப்பும் பலமுறை ஏற்பட்டுப் பல்கலைக் கழகம் தாற்காலிகமாய் மூட நேர்ந்துள்ளது. எனவே மாணவர்களின் படிப்பும் பாதிக்கப்பட்டிருக்கிறது. இந்த நிலை இன்னும் சில கல்லூரிகளிலும் உள்ளது.

இத்தகைய சூழ்நிலையில் தி. மு. க.வின் மாணவர் பிரிவைத் தொடங்க வேண்டும் என்ற யோசனை எரிகிற கொள்ளியில் எண்ணெய் ஊற்றுவதற்கொப்பாகும். அடுத்த பொதுத் தேர்தலில் தங்கள் கட்சிக்கு மாணவர்கள் ஆதரவைப் பெறுவதே இந்த யோசனையின் முக்கிய நோக்கம். இவர்களைப் பின்பற்றி மற்றக் கட்சிகளும் மாணவர் பிரிவைத் தொடங்கினால் என்னாவது?

கல்வி மணம் கமழ வேண்டிய இடம் கல்விக் கூடங்கள். அங்கு அரசியல் துர்நாற்றத்தைப் பரப்ப வேண்டாம்; சுயநலத்துக்காக மாணவர்களைப் பலியாக்க வேண்டாம்.

ஸ்ரீவில்லிபுத்தூர்.
3—11—70 ஆர். ரகுநாதன்

இந்தப் பகுதியில் ஓர் அன்பர் பரிசுச் சீட்டைத் தமிழகம்தான் முதலில் ஆரம்பித்தது என்று குறிப்பிட்டிருந்தார். அது தவறு. முதலில் ஆரம்பித்தது கேரள அரசுதான். அதற்கு முன்னரே அரசு ஆதரவுடன் ஒரிஸ்ஸாவில் ஆரம்பித்து நடந்து வந்தது.

கும்பகோணம்
19—11—70 டி. எஸ். சீதாராமன்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

